ஜீவாவின்

புதுமைப் பெண்

ஜீவாவின்

# புதுமைப் பெண்

ப. ஜீவானந்தம்




நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்
41-பி. சிட்கோ எஸ்டேட். சென்னை-600 098.

# முன்னுரை

## (டாக்டர் மு. வரதராசனார்)

'புதுமைப் பெண்' என்ற நூலில் அமைந்த கடிதங்கள் கருத்துக்கள் பொதிந்தவை; பழைய காலத்து அறிஞர்களின் கொள்கைகளை இந்தக் காலத்து முன்னேற்றக் கொள்கை களோடு ஒருங்கு வைத்துச் சீர்தூக்கிப் பார்ப்பவை. தம் பேச்சாலும் எழுத்தாலும் தமிழ் மக்களின் உள்ளங்களைக் கவர்ந்து முன்னேற்றத் தொண்டுகளைப் பல ஆண்டு களாகப் புரிந்து வந்த அறிஞர் ஜீவா அவர்கள் தம் இதழில் தொடர்ந்து எழுதி வந்த கடிதங்களின் தொகுப்பு இது. அவர்க்கு இயல்பாக அமைந்திருந்த விறுவிறுப்பும் துடிதுடிப் பும் புத்துலக ஆர்வமும் பொதுவுடைமை எழுச்சியும் இந்தக் கடிதங்களின் நடையிலும் உணர்ச்சியிலும் விளங்கக் காண லாம். அசைந்தும் ஆடியும் சாய்ந்தும் நிமிர்ந்தும் உரத்த குரலில் எடுப்பாகப் பேசும் அவர்தம் உணர்ச்சி வேகத்தை யும் பல இடங்களில் காணலாம். இருவரிடையே எழுதப்படும் கடிதங்களாகக் கற்பனை செய்து இயற்றப்பட்டவை. ஆகை யால், நெருங்கிய உறவுக்கு உரிய அந்த அணுக்கமும் அன்பும் தொடக்கம் முதல் முடிவுவரையில் அமைந் திருத்தலும் காணலாம். எவ்வளவு பெருமைக்கு உரிய சான்றோர்கள் ஆயினும், அவர்க்குத் தரவேண்டிய மதிப்பைத் தருவதோடு, சுட்டிக் காட்டவேண்டிய கருத்து

வேறுபாடுகளைத் தவறாமல் சுட்டிக்காட்டும் நடுநிலைமை யும் அஞ்சாமையும் இந்த நூல் முழுதும் உள்ளன.

அறிஞர் பெர்னாட்ஷாவும் தமிழ்ப் பெருங் கவிஞர் பாரதி யும் புத்துலகச் சிற்பிகள்; ஆகவே புதுமைப் பெண்ணின் பெற்றியைத் தெளிவுற உணர்ந்தவர்கள். இந்தஉண்மையை ஜீவா அவர்கள் மறவாமல் எடுத்துக் கூறியுள்ளார்.

ஆனால் இத்தகைய புத்துலகக் கனவுக்கு இருபது நூற் றாண்டுகளுக்கு முன் வாழ்ந்த தமிழறிஞரிடம்புதுமைப்பெண் பற்றிய கருத்துக்களை எவ்வாறு எதிர்பார்க்கமுடியும்? ஆகவே தொல்காப்பியத்திலும் சங்க இலக்கியத்திலும் பெண்களின் நிலைபற்றிக் கூறப்படும் கருத்துக்களை இன்றைய புதுமைச் சமுதாயம் கண்மூடி ஏற்றுக்கொள்ளத் தேவையில்லை; ஏற்றுக்கொள்வது தவறும் ஆகும். ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பே அவர்களும் ஓரளவு பெண்களுக்குச் சிறப்புத் தந்து நல்ல கனவுகள் கண்டிருந் தால், அவற்றை மட்டும் போற்றி, அவர்களின்முன்னேற்றக் கருத்துக்களுக்கு மதிப்புத் தருதல் கடமை. அவ்வாறு அல்லாமல், புகழ்பெற்ற அந்த இலக்கிய ஆசிரியர்களிடம் நமக்கு உள்ள பெரு மதிப்பாலும் ஈடுபாட்டாலும், பெண் களைப் பற்றி அவர்கள் சொன்ன எல்லாக் கருத்துக்களும் இன்றைய நிலைக்கும் பொருந்தும் என்று கொள்வோ மானால், அது நம் முன்னேற்றத்துக்கு நாமே இட்டுக் கொள்ளும் முட்டுக் கட்டையாக முடியும். ஆகவே, தொல் காப்பியரையும் சங்கப் புலவர்களையும் திருவள்ளுவரையும் நன்கு மதித்துப் போற்றும் ஜீவா, முன்னோர்கள் பெண் களைப் பற்றிக் கூறியுள்ள சில கருத்துக்கள் பழையகால வாழ்க்கைக்கு மட்டுமே ஏற்றவை என்றும் இன்றைய

சமுதாய முற்போக்குக்கு ஏலாதவை என்றும் தெளிவு படுத்தியுள்ளார். பழந் தமிழிலக்கியத்தில் பெண்கள் பெற்றிருந்த முன்னேற்றம், அந்தக்கால நிலையை ஒட்டிப் பார்க்கும் போது போற்றத் தக்கதாக இருந்தது என்பதை யும் அவர் சுட்டிச் செல்கிறார்: ''அந்தக் காலத்தில் பெண்கள் சுதந்திரத்தோடு வாழ்ந்தார்கள் என்றும், எத்தகைய கட்டுக்காவல் இன்றியும் முகமூடிகள் இன்றியும் பொது இடங்களில் நடமாடினார்கள் என்றும் பத்துப் பாட்டுத் தெரிவிக்கிறது.'' (பக். 61) ஆயினும், இந்தக் காலத்தின் தேவையை ஒட்டிப் பார்க்கும்போது, அந்த முன்னேற்றம் போதாது என்பதே அவருடைய கருத்து. மகளிர் ஆடவரின் உயிர் என்னும் கருத்து பழங்காலத்தில் இல்லை; கற்பு ஆடவர்க்கு வற்புறுத்தப்படவில்லை; பல பெண்களோடு ஒருவன்வாழ்தல் கடிந்துரைக்கப்படவில்லை; பொது மகள் என்பது போல் பொது மகன் என்று ஆண் மகனின் தவறு சுட்டப்படவில்லை; கணவன் உயர்ந்த வனாகவே கூறப்பட்டுள்ளான். இத்தகைய குறைகளைத் தக்க இலக்கியச் சான்றுகளோடு ஜீவா எடுத்துக் காட்டி யுள்ளார். ஒரு சில இடங்களில் பெண்ணுக்குத் தரப் பட்டுள்ள பெருமையையும் சுட்டிக் காட்டி பொதுவாக ஆண் மகனுக்கே உயர்வும் சிறப்பும் கூறப்பட்டுள்ளமையால் புதுமைப் பெண் அந்தப் பழைய மரபுகளை ஏற்க முடியாது என்பதை ஆணித்தரமாக விளக்கியுள்ளார்.

இந்த இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும்புதுமைப் பெண் வரவேற்கத் தக்க அளவிற்கு முன்னேற்றம் இல்லை என்பதையும் நாம் மறத்தல் கூடாது. தாலி பெண்ணுக்கு மட்டும் கட்டும் வழக்கம் ஏன் என்பதை நமக்குள் நாம்

கேட்கும் நிலைமை இன்னும் உள்ளது. ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் கணவன் பெயருக்குள் மனைவியின் பெயர் மறைந்து விடுகிறதே அல்லாமல், மனைவியின் பெயருக்குள் கணவனின் பெயர் அமையும் வழக்கம்இல்லை. எட்வர்ட் என்பவனை மணந்த எலிசபெத், மிஸஸ் எட்வர்ட் ஆகிறாளே அல்லாமல் அவன் மிஸ்டர் எலிசபெத் ஆவதில்லை. இது போலவே பழைய மரபுகள் கணவனுக்கு உயர்வு தரும் கூறுகள் இன்னும் சில இருந்து வருகின்றன. ஆயினும் புதுமைப் பெண் இவற்றை எல்லாம் கடந்து ஆணுடன் நிகரான நிலை பெற்று நிற்கும் கருத்து வலிமை பெற்று விட்டது. ஆகையால் பழைய இலக்கியத்தைக் கற்கும் புதுமைப் பெண்கள் அந்தப் பழைய மரபுகளைத் தெளிவாகப் பார்க்கும் பார்வை பெறவேண்டும். அந்தத் தெளிவு பெறுவதற்கு உதவும் நூல் இது. இத்தகைய நூலை உதவிய ஜீவா அவர்களின் புத்துலக உணர்ச்சிக்கு வணக்கம் செலுத்தத் தமிழகம் இதனைப் போற்றுவதாக.

# புதுமைப் பெண்

## கடிதம் 1

அன்பு மிக்க.........

உனது முடங்கல் தடங்கலின்றிக் கிடைத்தது. கடிதத்தின் உள்ளடக்கத்தைச் சுவைத்தேன்; மேலும் சுவைத்தேன். என் நெஞ்சம் உணர்ச்சியை இன்பத்தில் தோய்த்துத் தோய்த்து எடுத்தது.

''பழம் பெரும் தமிழ்ப் பண்பாட்டில் பெண்களைப் பற்றிய கருத்து என்ன? கண்ணோட்டம் என்ன? சாதாரண மக்களிடையில் தலைமுறைத் தத்துவமாக, பெண்களைப் பற்றி இருந்து வரும் மனப்பான்மை என்ன? சான்றோர்கள் பெண்மையைப்பற்றிக் குறைத்துப் பேசுகிறார்களா? கூட்டிப் பேசுகிறார்களா? சரியாக, முறையாகப் பேசுகிறார்களா?''

அன்பே! இவ்வாறு உனது கடிதத்தில் கேள்வி மேல் கேள்வி கேட்டிருக்கிறாய்.

இன்று உலக முழுவதிலும் பெண்கள் நிலைமை என்ன? பாரத நாட்டில் பெண்கள் வாழ்வு எப்படி? தமிழகத்தில் பெண்கள் எவ்வாறு இருக்கிறார்கள்? ஜனநாயகம் என்றும், சமதர்மம் என்றும், சமாதானம் என்றும் உலகமெங்கும் முழங்கப்படுகிறது அல்லவா இன்று? இந்த கோஷங்களுக்கும் பெண்களுக்கும் என்ன ஒட்டு? என்ன உறவு?

பெண்களுக்குத் தனிப் பிரச்சினைகள் உண்டா? உண்டென்றால் அவைகளுக்கு பைசல் காண பெண்களுக்கு மட்டும் தான் பங்கா? அல்லது ஆண்களுக்கும் பங்கு உண்டா?

பெண்ணுரிமைக்காக, பெண் விடுதலைக்காகத் தனி இயக்கம் வேண்டுமா? தனி ஸ்தாபனங்கள் வேண்டுமா?

உலகத்தில், இந்தியாவில், தமிழகத்தில் பெண்கள் இயக்கம் எந்த நிலையில் இருக்கிறது? என்னென்ன பிரச்சினைகளுக்காகப் போராடுகிறது?

இவ்வாறு, உனது அன்புக் கடிதத்தில், கேள்வி மாரி பொழிந்திருக்கிறாய். என்றும் இல்லாதவாறு, என்னைக் கேள்வி மழையில் தள்ளி, திக்கு முக்காடச் செய்திருக்கிறாய்.

இதுகாறும் தீட்டிய கடிதங்களில் நீ குடும்பக் கதைகளை எழுதுவாய்; உனது படிப்பையும், பரீட்சைகளையும் பற்றி எழுதுவாய்; ஆடல் பாடல்களைப் பற்றி எழுதுவாய்; கிடைத்த 'மார்க்கு'களையும் தேறிய தரத்தையும், பெற்ற பரிசுகளையும் பற்றி எழுதுவாய்; நீயும் உனது தோழியர்களும், பொழுது போக்குக்காக அவ்வப்போது நடத்தும் இனிய உரையாடல்கள் பற்றியும் அவற்றில் நீர்க்குமிழி போல் தோன்றி மறையும் செல்லச் சண்டைகள் பற்றியும் எழுதுவாய்.

இவைகளையெல்லாம், நான் படிக்கப் படிக்க சுவை சொட்ட, இன்பம் சொட்ட எழுதுவாய்; இது உனது வழக்கம்.

ஆனால், இன்று நான் பெற்ற உனது கடிதமோ, முன் மாதிரியானதல்ல. உன் உணர்ச்சியில் ஒரு 'புதிய திருப்பத்'தைக் காட்டுகிற கடிதம் இது.

அன்பே! உலக சரித்திரத்தில் பெண்கள் இயக்கம் எப்படித் தோன்றி வளர்ந்து வந்திருக்கிறதென்று வினா எழுப்பி, விடை கேட்கிறாய். சகல துறைகளிலும், சர்வ வியாபகமாய்ப் பெண்கள் இயக்கம் எப்படிப் பரவிப் படர்ந்து நிற்கிறதென்று என்னிடம் கேட்கிறாய். இவைகளைப் பற்றிய எனது அறிவையும், அனுபவத்தையும் பற்பல கேள்விகளால் நயமாகக் கிண்டிவிட்டு விடை காண முயல்கிறாய்.

என்றைக்கும் இல்லாத புதுமையாக நீ சரமாரியாகக் கேள்விகள் கேட்டும் கடிதம் எழுதியிருக்கிறாய். உலகம் தழுவிய ஒரு பெரும் இயக்கமான பெண்கள் இயக்கத்தைப் பற்றிக் கேட்டுக் கடிதம் எழுதியிருக்கிறாய். தேனென இனிக்கும் வகையில் சுவைபடக் கடிதம் எழுதியிருக்கிறாய். இவை யாவற்றிற்கும் மேலாக, பொட்டு வைத்தது மாதிரி, மனித இனத்தின் செம்பாதியும் உன்னினமும் ஆகிய பெண்ணினத்தின் பிரச்சினைகளையெல்லாம் கிளறி, முன்னிறுத்தி எனது பதில்களில் என்ன தீர்வுகள் பிறக்கின்றன என்று பார்க்கவும் துணிகிறாய்.

எல்லாவற்றிற்கும் சிகரம் வைத்ததுபோல், அன்பே இன்றையப் பெண்கள் இயக்கத்தில், நவீனப் படிப்புப் படித்த பெண்களின் கடமை என்ன, சொல்லுங்கள் என்றும் கேட்டு எழுதியிருக்கிறாய்.

உனது கடிதத்தை, குறிப்பாக, உனது கேள்விகளுக்குப் பதில் சொல்லும் உனது எழுத்துப் பாணியை, நினைக்க நினைக்க ஏற்பட்ட எதிரொலியைத்தான், உனது கடிதத்தைப் படித்ததும் எனது நெஞ்சம் இன்பக் கடலாடுகிறது என்று தொடக்கத்தில் படம் பிடித்துக் காட்டினேன்.

இவ்வளவு தூரம் உனது கடிதத்தைப் பற்றிய எனது மனவெழுச்சியைக் கூறினேன். இது இருக்கட்டும்.

அன்பே! உனது வேண்டுகோள்படி பெண்கள் இயக்கத்தின் பல்வேறு கூறுகளைப் பற்றி உனக்கு அடுத்த கடிதத்திலிருந்து எழுதுவேன். பலப்பல கடிதங்கள் எழுதுவேன். இடையீடின்றித் தொடர்ச்சியாக எழுதுவேன். எனவே 'ஜன சக்தி' வார மலரை ஒரு இதழ்கூடத் தவறவிடாமல், கட்டாயம் சேர்த்து வைப்பாய் என்று நம்புகிறேன்.

இனி இந்தக் கடிதத்தில், அறிமுகமாக உனக்குச் சில சொல்ல விரும்புகிறேன். நினைவாற்றலும், சிந்தனைத்

திறனும் படைத்த நீ, கருத்தில் ஊன்றி வைத்துக்கொள் வாய் என்பது உறுதி

சொல்கிறேன் கேள்.

படித்த, படிக்கிற யுவதிகளில் பலர்எப்படி வாழ்கிறார்கள் தெரியுமா? கடற்கரையில் விளையாடும் சின்னஞ்சிறு குழந்தைகள் துள்ளிக் குதித்து ஆடி, இங்கும் அங்கும் ஓடி, அங்கு ஒரு அழகான சிப்பியையும், இங்கு ஒரு மெல்லிய கடற்பாசியையும் கண்டு மகிழ்வதைப்போல் வாழ் கிறார்கள்.

ஆனால், நீ அப்படிப்பட்ட ரகத்தைச் சேர்ந்தவளல்ல. அறியப்படாமல் பரந்து விரிந்து கிடக்கும் பெருங்கடலை அறிய முயல்கிறாய் நீ. அதனால்தான் விடைவேண்டி, ஆயிரத்தெட்டுக் கேள்விகளை என்னிடம் கிளப்பியிருக் கிறாய்.

இலட்சியம் இல்லாத ஆணானாலும் சரி பெண்ணா னாலும் சரி, திசையறி கருவியில்லாத கப்பல் என்ற உண்மை உன் மனதில் பசுமரத்தாணி போல் பதிந்து விட்டது என்பதை நான் காண்கிறேன். கண்டு பெரு மகிழ்ச்சியடைகிறேன்.

அன்பே! எனக்கு மிகப் பழக்கமான ஒரு பெரிய டாக் டரிடம் ஒரு தடவை ஒரு கேள்வி கேட்டேன். ஒரு சிறந்த மருத்துவரிடம் என்னென்ன பண்புகள் இருக்க வேண்டும் என்பது என் கேள்வி. அவர் சொன்னார்:

''நல்ல வைத்தியனிடம் மூன்று பண்புகள் இருக்க வேண்டும். ஒன்று, தன்னலங் கருதாமலும் உள்ளதை மறைக்காமலும் இருக்கும் உணர்வு; இரண்டு, நோயாளி படு கிற துன்பத்தையும் வேதனையையும் தீர்க்க விரும்பும் பரிவு; மூன்று, நோயின் தன்மையையும் அதனால்வரும் கேட்டையும் பகுத்து அறிந்து, அதைக் குணப்படுத்தும் மருந்தை அறிகிற அறிவு'' என்று.

இதை உன் நினைவுக்குக் கொண்டு வருகிறேன். ஏன்! நான் மேலே காட்டிய நல்ல டாக்டரின் பண்போடு சமுதாய வாழ்வில் பெண்ணினத்தின் பிரச்சினைகளையும் பைசல் களையும் தெரிந்து புரிந்து காட்டுவதில் எந்த அளவு வெற்றி பெறப் போகிறேன் என்பதை நீதானே முடிவு கட்ட வேண்டும்? அதற்காகத்தான்.

அன்பே! ஏடுகளையும் நூல்களையும்போல் எனது கடிதமும் ஓரளவுக்குத்தான் உனக்கு உதவி செய்யமுடியும். மற்றப் பெரும்பகுதி, அனுபவ வாயிலாக அறிய வேண்டிய வைகளே. கைகாட்டி மரம் உனக்கு வழியைச் சுட்டிக் காட்ட முடியும். ஆனால் நீ போக வேண்டிய இடத்திற்கு உன்னைக் கொண்டு சேர்க்க அதனால் முடியாது.

இவைகளை எல்லாம் நினைவில் வைத்துக்கொண்டு, எனது கடிதங்களை நீ ஊன்றிப் படிப்பாய் என்று நம்பு கிறேன். உனது சகோதரிகளையும் படிக்கவைப்பாய் என்பதில் எனக்கு நம்பிக்கையுண்டு.

இந்தக் கடிதம் உனக்கு எந்த அளவு சுவைக்குமோ எனக்குத் தெரியாது. ஆனால், அடுத்த கடிதத்தை நீ ஆவலோடு எதிர்பார்ப்பாய் என்று மட்டும் என்னவோ என் மனதில் படுகிறது.

## கடிதம் 2

அன்பு மிக்க......

''ஒளி நிறைந்த இடத்தில் நிழல் இருண்டு கிடக்கும்'' என்ற உண்மையை ஜர்மானிய மகாகவி பாடிக் காட்டு கிறான். எனக்கு இந்த உண்மை சாதாரண அனுபவம். ஆயினும் கத்தேயின் பாட்டைப் படிக்கிறபொழுது, படித்துச் சுவைக்கிறபொழுது என்மனம் இன்பத்தில் கிளு கிளுக்கிறது.

"ஒளி நிறைந்த இடத்தில் நிழல் இருண்டு கிடக்கும்." "அதுபோல், அன்பு நிறைந்த இடத்தில் ஐயப்பாடு ஆழம் பாய்ந்து கிடக்கும்" என்று என் மனதில், உன் கடிதத்தைப் படித்ததும், எதிரொலி ஏற்பட்டது.

"ஒண்ணே ஒண்ணு, என் கண்ணே கண்ணு" என்று என் கடிதத்தை முதலும் முடிவுமாக நான் நிறுத்தி விடுவேனோ என்று நீ படு சந்தேகப்படுகிறாய். தொட்டால் எதையும் நான் தொடர்ந்து முடிக்க மாட்டேன் என்று நீ யாரிடமோ கேட்டு எவ்விதமோ தெரிந்துகொண்டு, என்னைச் சந்தேகிக்கிறாய்.

'புதுமைப்பெண்' தலைப்பில் நான் எழுதிய முதல் கடிதத்தைப் படித்துவிட்டு, நீ எனக்குத் தீட்டியிருக்கும் கடிதத்தைப் படித்ததும் என்னிடம் ஏற்பட்ட பிரதிபலிப்பு இதுதான்.

உனக்கு ஏற்பட்டுள்ள சந்தேகம் தீர வழி எது என்பது எனக்கு நன்றாகத் தெரியும். நீ புன்முறுவலுடன் ஒப்புக் கொள்ளும்படி அந்த வழியைச் சொல்லி விடட்டுமா? நான் என்ன வந்தாலும் சரி என்று, பல்லைக் கடித்துக் கொண்டு வாராவாரம் முறையாகக் கடிதத்தைத் தீட்டிவிடுவதுதான். இது நிற்க.

நான் ஒரு பொதுஉடைமைவாதி. இது உனக்குத் தெரியும். நான் ஒரு மார்க்ஸியவாதி. இதுவும் உனக்குத் தெரியும்.

நான் ஒரு புதிய வாழ்வுக்காக, தமிழகத்திலும், இந்தியாவிலும், உலக முழுவதிலும் ஒரு புதிய வாழ்வுக் காகப் பொது உடைமைக் கட்சி அங்கத்தினனாக இருந்து பணிபுரிந்து வருகிறேன். இதுவும் உனக்குத் தெரியும்.

அன்று நீயும் நானும் அதிகாலையில் குமரிமுனைக் கடற்கரை ஓரத்தில் வீற்றிருந்தோம். சூரியன் கிழக்கே

பொன்குடம் போல் தலையை நீட்டித் தண்ணீரினுள்ளிருந்து மேலே மேலே வந்து கொண்டிருந்தான். அந்த வேளையில், சந்திரன் மேற்கே வெள்ளிக்குடம்போல் கடல் நீருள் மூழ்கிக் கொண்டிருந்தான். இருவரும் அந்தக் காட்சிகளை மாறி மாறிப் பார்த்து மகிழ்ந்து கொண்டிருந்தோம்.

அப்பொழுது, நான் உன்னைப் பாரதியின் கண்ணன் பாட்டில் ''கண்ணன்-என்தாய்'' என்ற பாட்டைப் பாடச் சொன்னேன். நீயும் வழக்கமான 'பிகு' இன்றி உடனே பாடினாய். உனது குயில் குரலில் உச்ச ஸ்தாயியில் பாடினாய்.

''விந்தை விந்தையாக
எனக்கே பல
வித விதத் தோற்றங்கள்
காட்டுவிட்பான்;
சந்திரனென்றொரு
பொம்மை—அதில்
தண்ணமுதம் போல ஒளி
பரந்தொழுகும்;
மந்தை மந்தையாய்
மேகம்—பல
வண்ணமுறும் பொம்மையது
மழை பொழியும்;
முந்த ஒரு சூரியன்
உண்டு - அதன்
முகத்தொளி கூறுவதற்கோர்
மொழியிலையே''

என்ற நொண்டிச் சிந்து அடியைக் கன கச்சிதமாகப் பாடினாய். நினைவிருக்கிறதா, உனக்கு? பாட்டு முடிந்ததும் இருவரும் மௌனத்தில் ஆழ்ந்தோம்.

சில நிமிஷங்கள் சென்று நீ என்னிடம் கேட்டாய் ''பொது உடைமை வாழ்வு என்றால் என்ன?'' என்று

''மனிதனை மனிதன் சுரண்டுதல் ஒழிய வேண்டும். மனிதனை மனிதன் அடிமை கொள்ளுதல் ஒழிய வேண்டும். மனிதனை மனிதன் ஏய்த்து வாழுதல் ஒழிய வேண்டும். இது ஒழிந்து, விஞ்ஞானமும் தொழில் நுட்பமும் பணியாட்களாக மாறி, விளைபொருள்களும் செய்பொருள்களும் அமோகமாகப் பெருகி, அன்பிலும், அறிவிலும், அழகிலும், இன்பிலும், பண்பிலும் உலகமெலாம் மனித வர்க்கம் முழுவதும் மிதக்க வேண்டும். குறிப்பிட்டுச் சொல்கிறேன். ஆண்-பெண் இருபாலாரும் சரிநிகராய் மிதக்க வேண்டும்'' என்று நான் விடையளித்தேன். நினைவிருக்கிறதா உனக்கு?

நினைவுத் திறன் மிகுதியும் உள்ளவள் நீ. இல்லா விட்டால், இரண்டாண்டுப் படிப்பை ஓராண்டில் படித்து முதல் 'மார்க்' வாங்கியிருக்க முடியுமா? நினைவுத் திறன் குறைவாக இருந்தால் டால்ஸ்டாய் பெருமானின் உலகு புகழ் நாவலை — ''போரும் - சமாதானமும்'' என்ற மாபெரும் நாவலை—ஒரே வாரத்தில் படித்து முடித்ததோடன்றி, என்னிடம் அந்தப் பெருங்கதையையும் அனாயாசமாக, உன்னால் சொல்லியிருக்க முடியுமா?

ஆகவே, என்னிடம் கேட்டதிலிருந்து ஒரு மிக லேசான சமதர்ம வாழ்வுக் காட்சி உன் மனதில் படிந்திருக்கும் என்பது எனது அழுத்தமான நம்பிக்கை.

இனி, இன்று நான் உனக்கு எழுதப் போகிற பொருளுக்கு வருகிறேன்.

உலகம் எங்கும் இன்று சமதர்ம முழக்கம் காது செவிடு படக் கேட்கிறது அல்லவா? நமது நாட்டிலும் எல்லாக் கருத்தோட்டக்காரர்களும், விதி விலக்கு இன்றி, அவரவர் உண்ட அறிவுக்குத் தக்கபடி, சமதர்ம ஏப்பம் விடுகிறார்கள் அல்லவா?

எனவே உனக்குச் 'சமதர்ம வாழ்வில் பெண்கள் நிலை என்ன' என்பதைப் பற்றி முதன் முதலில் எழுத விரும்புகிறேன். இதன் மூலம் உனக்குப் பெண்கள் பிரச்சினையைப் பற்றிய ஒரு கண்ணோட்டம் அளிக்க விரும்புகிறேன்.

அந்தக் கண்ணோட்டம் உனக்கு ஏற்பட்டு விட்டால், நான் தொடர்ந்து எழுதப் போகிற கடிதங்களை நீ சுலபமாகப் படித்து, தக்க நிர்ணயிப்புக்கு வர உதவிகரமாயிருக்கும்.

தமிழ்ப் பெண்களின் வரலாற்று வாழ்வையும் சரி, உலக மாதர் இயக்கத்தின் வரலாற்று வாழ்வையும் சரி, தமிழகத்தில், இன்றையப் பெண்களின் கடமையையும் சரி, தெக்கத் தெளிவாய்த் தெரிந்து கொள்வதற்கு இந்தக் கண்ணோட்டம் உதவிகரமாயிருக்கும்.

இந்தக் கடிதத்தில் சொல்ல விரும்பின ஒன்றையும் சொல்ல முடியவில்லை. வேலை நெருக்கடியால், இன்று அவசரக் கோலமாகத்தான் எழுதத் தொடங்கினேன் எப்படியும் குறிப்பிட்ட சில கருத்துக்களைச் சொல்லி விடலாம் என்று எண்ணித்தான் எழுத உட்கார்ந்தேன்.. ஆனால் இடையில் அவசர வேலை வந்து விட்டது. மீண்டும் வந்து உட்கார்ந்து சிந்திக்கத் தொடங்கினேன். மீண்டும் அவசர அழைப்பு வந்து விட்டது. என்ன செய்வது?....

அடுத்த கடிதத்திலிருந்து' முறையாக விஷயம்......

## கடிதம் 3

அன்பே!

மரங்களில் பூவாது காய்க்கும் மரங்கள் உண்டு என்கிறார்கள். அதுபோல், மரங்களில் ஆண்டு முதிராதவர்களிலும் அறிவில் முதிர்ந்தவர்கள் இருக்கிறார்கள். பாத்தி

கட்டி விதைக்காமலேயே முளைக்கிற விதைபோல ஒரு சிலர் பிறர் அறிவுரை இல்லாமலேயே அறிவுடையவராய் விளங்குகிறார்கள்.

இன்று அதிகாலையில் உனக்குக் கடிதம் எழுத நான் உட்கார்ந்ததும் இந்தக் கருத்துக்கள் என் மனதில் 'பளிச்சுப் பளிச்சென்று' மின்னின.

சென்ற வாரம் நான் உனக்குக் கடிதம் எழுதவில்லை. அது உனக்கு ஏமாற்றத்தை அளித்திருக்கும் என்றும, அதனால் மனம் மறுகியிருப்பாய் என்றும், அதன் விளைவாக எனக்குக் காரசாரமாய்க் கடிதம் தீட்டுவாயென்றும் எதிர்பார்த்தேன். நீ என்னை இலவு காத்த கிளி ஆக்கி விட்டாய்.

"வாழ்க்கையிலே ஒரு கதவு மூடிக்கொண்டால் இன்னொரு கதவு திறந்து கொள்ளும். இது இயற்கை விதி. பின் ஏன் நாம் சங்கடப்படுகிறோம்? காரணம் இதுதான். திறந்த கதவை நாம் பார்ப்பதில்லை; மூடிக்கொண்ட கதவைப் பற்றியே சாதாரணமாக நாம் ஆசையும் அழுகையுமாய் நிற்கிறோம்" என்று உன் கடிதத்தைத் தொடங்குகிறாய். இந்த ஔவைக்கு நரை திரையில்லையே என்று நான் மூக்கில் விரல் வைக்கத் தூண்டுகிறாய்.

அப்பால், "நீங்கள் எனக்குக் கடிதம் தீட்டாதது எனக்கு நஷ்டந்தான். ஆனால் அதைவிடப் பெரிய லாபம், நீங்கள் எட்டையபுரம் சென்று பாரதி விழாவில் கலந்து கொண்டது என்று கருதுகிறேன்" என்று நிதானத்துடன் எழுதுகிறாய்.

தொடர்ந்து அதை விளக்குமுகத்தான், "தமிழ் மக்களின் ஒப்பற்ற பெரும் புலவனான பாரதி, புதுமைப் பெண்ணின் பேரன்பன் அல்லவா? அவன் நினைவு விழாவில் கலந்து கொண்டிருக்கிறீர்கள்; கலைஞர்களோடு அளவளாவி இருக்கிறீர்கள்; லட்சக்கணக்கான மக்க

ளிடையில் பேசியிருக்கிறீர்கள்; இரண்டு நாட்களும் பேசி இருக்கிறீர்கள். வானொலி நிலையத்தாரின் அற்ப மனம் உங்களின் பெரும் பேச்சை இரண்டு நாட்களும் ஒலிபரப்பா விட்டாலும், ஒரு நாள் பேச்சை தமிழுலகம் முழுவதிலும் கேட்குமாறு பேசியிருக்கிறீர்கள். இது பெரும் லாபமல்லவா? எனவே, ஒரு கதவு அடைத்தது. நஷ்டயீடாக, ஏன், கொஞ்சம் அதிகமாகவே மற்றொரு கதவு திறந்தது'' என்று அந்தம் சிந்த அழகு ஒழுக நீ எழுதியிருக்கிறாய். இவ்வாறு எழுதி என்னைப் பரவசக் கடலில் ஆழ்த்தி யிருக்கிறாய்.

அடிக்கடி இம்மாதிரிக் கடிதம் எழுதி உங்களை இந்தப் பெண்மணி ஏமாற்றமாட்டார்களா என்று என் அந்தராத்மா என்னிடம் ஆவல் துடிக்கக் கேட்கிறது. நிற்க!

முதன் முதலில் அன்பே! 'புதுமைப் பெண்' பற்றிய புத்தம் புதிய கண்ணோட்டத்தை உனக்குக் காட்ட விரும்புகிறேன்.

> ''பொதுவாக நாட்டின் அரசியல் வாழ்விலும் சரி, சமுதாயப் பொது வாழ்விலும் சரி, பெண்கள் தங்களுக் குரிய நியாயமான நிலையான இடத்தைப் பெற வேண்டும். அது ஏற்படாத வரையில், சமதர்மத்தைப் பற்றிப் பேசுவதிருக்கட்டும், ஜனநாயகத்தைப் பற்றிக்கூட, பிசகின்றி முழுமையாகப் பேசுவது முடியாது.''

புது உலகச் சிற்பி என்று மனித வர்க்கத்தின் நெஞ்சில் அழியாத இடம் பெற்றுவிட்ட பெரியாரில் பெரியார் மேற் கூறியவாறு சொல்கிறார்.

புதுமைப் பெண் தழைக்க வேண்டிய புதிய வாழ்வில் இரண்டு கூறுகள் பொதிந்து கிடக்கின்றன. ஒன்று, அழித்தல் கூறு; மற்றொன்று, ஆக்கல் கூறு.

'ஆணைவிடப் பெண் தாழ்ந்தவள்' என்ற எண்ணம், பேச்சு, எழுத்து, நடப்பு யாவும் வேரோடும் வேரடி

மண்ணோடும் களைந்து எறியப்பட வேண்டும். இது 'அழித்தல்' கூறு.

ஆணோடு பெண்ணுக்கு ஒரு புதிய சமத்துவம் ஏற்பட வேண்டும். அன்பே! நினைவில் வைத்துக்கொள். சமத்துவத்தைப்பற்றிய பார்வையிலும் 'பழைய' 'புதிய' பார்வைகள் உண்டு.

இந்தப் 'புதிய சமத்துவம்' என்பது என்ன?

கல்வித் துறையில் ஆண் - பெண் சமநிலை ஏற்பட வேண்டும். அரசியல் உரிமைகளை பொறுத்தமட்டில், ஆண் - பெண் ஏற்றத்தாழ்வுகளுக்கு எந்த வகையிலும் இடம் இருக்கக் கூடாது. தொழில் நுட்பத் துறையில், ஆணும் பெண்ணும் ஈடு ஜோடாக வாழ வேண்டும். சமுதாயத் துறையில் ஆணும் பெண்ணும் சரி நிகர் சமானம் என்று நடத்தப்பட வேண்டும். கலாசாரத் துறையில், ஆணும் பெண்ணும் இரு கண்களென, ஒப்பாகத் தழைக்க வேண்டும். இதுபோன்றே ஆன்மீகத் துறையிலும் குடும்பத் துறையிலும், சுருங்கக்கூறின் எத்துறையிலும் சமத்துவம் நிலவ வேண்டும். இது ஆக்கல் கூறு.

அழிதலும் ஆக்கலும் துண்டு துண்டாக, தனித்தனியாக நடைபெறுவதில்லை. அழிதலில் ஆக்கலும் ஆக்கலில் அழிதலும் நடந்துகொண்டே இருக்கின்றன. இயற்கையிலும், சமுதாயத்திலும், மனக் களத்திலும், இந்த அழிதல் ஆக்கல் இயக்கம் சதா சர்வசதா நிகழ்ந்து கொண்டே இருக்கிறது - ஜீவ நதியின் நீரோட்டம் போல்.

அன்பே! கற்ற மனிதன் ஒரு குளம்; அறிவுடைய மனிதன் ஓர் ஊற்று என்பார்கள். நீ அறிவுடைய நங்கை. நான் எடுத்துக் கூறும் எந்த உண்மைகளையும் தத்துவார்த்தங்களையும் நீ எளிதில் புரிந்து கொள்ள முடியும் என்பது எனது நம்பிக்கை. ஆனால் லட்சோப லட்சம் பெண் மக்கள் நான் சொல்வதையெல்லாம் எளிதில் புரிந்துகொள்ள முடியாது.

எனவே, நீ, நான் கூறும் கருத்துக்களைப் படித்து நன்றாகப் புரிந்து கொள். பின்னர், தாய்மார்களுக்கும், சகோதரிகளுக்கும் புரியும்படி எப்படிச் சொல்லவேண்டுமோ அப்படிச் சொல். முழுத் தேங்காயை எடுத்து மட்டை நாரை உரித்து, ஓட்டை உடைத்து, பருப்பாகவோ, பருப்பைப் பாலாகவோ கொடுக்க வேண்டுமா, அவ்வாறு கொடு. பழத்தைத் தோலுரித்தோ துண்டு துண்டாக நறுக்கியோ கொடுக்க வேண்டுமா, அவ்வாறு கொடு. திராட்சைப் பழம் போல் அப்படியே கொத்தாகவோ, உதிரியாகவோ கொடுக்க வேண்டுமா அவ்வாறு கொடு.

ஏன் இவற்றையெல்லாம் கூறுகிறேன் தெரியுமா? அழித்தல் கூறு, ஆக்கல் கூறு என்றெல்லாம் சொன்னேன் அல்லவா? நீ அவற்றைக் கண்டு மிரளக்கூடாது என்றுதான் நீ மிரள மாட்டாய் என்பது எனக்கு நன்றாகத் தெரியும். இருந்தாலும் சொல்லவேண்டியதைச் சொல்லி வைக்கிறேன்.

இனி விஷயத்தைத் தொடர்கிறேன்.

ஆணோடு சரி நிகர் சமமான புதிய சமத்துவம்தான் 'புதுமைப் பெண்'ணின் கண்ணோட்டம் என்று மேலே எடுத்துக் காட்டினேன் அல்லவா? இந்தப் புதிய சமத்துவம் வாழ்வில் மென்மேலும் வெற்றி சூட எத்தகைய உத்தர வாதம் வேண்டும் என்பதுபற்றி புதுமைக் கண் படைத்த வர்கள் என்ன சொல்கிறார்கள் என்பதை உனக்குச் சொல்ல விரும்புகிறேன். விரிவாகப் பின்னால் சில கடிதங்களில் தீட்டுவேன். என்றாலும் இந்தக் கடிதத்தில் ஒரு குறிப்புத் தர விரும்புகிறேன்.

வேலை செய்வதில் ஆண்களோடு பெண்களுக்குச் சம உரிமை இருக்க வேண்டும். இதில் முடியுமா முடியாதா என்ற கேள்விக்கு இடமில்லை. உண்டென்றால் அது இரு பாலாருக்கும் பொதுவான கேள்வியாக இருக்க வேண்டும். அதுதான் கண்கூடான அனுபவம் கூறும் தீர்ப்பு.

வேலைக்குச் சம்பளம் (உழைப்புக்கு ஊதியம்) ஆண், பெண் இருபாலாருக்கும் ஒரே தரமாகவே இருக்கவேண்டும்.

ஓய்வும் விடுதி நேரமும் ஆணுக்கும் பெண்ணுக்கும் ஒரே மாதிரி கிடைக்க வேண்டும்.

சமூக இன்ஷூரன்ஸ் கல்வி போன்ற விஷயங்களில் சம வாய்ப்பும் சம வசதியும் ஆணைப் போல் பெண்ணுக்கும் வேண்டும்.

சமுதாய நலவுரிமைகளிலெல்லாம் பெண்ணின் பங்கும் உரிமையும் ஆணைவிட இம்மியும் குறைதல் கூடாது.

இதுவரை கூறிய புதிய சமத்துவத்தின் வெளியீடுகளும் எதிரொலிகளும் உன் மனத்தை இன்பக் கடலாக்கும் என்பதை நான் அறிவேன்.

மேற்கூறியவை மட்டுமல்ல, இன்னும் கேள்!

புதிய சமத்துவத்தை உத்தரவாதம் செய்யப் பெண்களுக்குத் தனிச் சலுகைகள் பல வேண்டும். அவை எவை? சில சொல்கிறேன்.

தாய்-சேய் நல உரிமைகளை அரசாங்கம் கற்கோட்டையும் இரும்புக் கதவுமாக நின்று காக்கவேண்டும்.

குழந்தை குட்டிகள் அதிகமாகவுள்ள பெரிய குடும்பங்களுக்குச் சர்க்கார் உதவி தாராளமாகக் கிடைக்க வேண்டும்.

பிரசவ கால ஓய்வு முழுச் சம்பளத்தோடு பெண்களுக்குக் கிடைக்க வேண்டும்.

தாய்-சேய் நல விடுதிகளும், குழந்தை வளர்ப்பு நிலையங்களும் நாடு முழுவதும் சங்கிலிப் பின்னல் போல் முளைத்துத் தழைக்கச் சகல ஏற்பாடுகளும் செய்ய வேண்டும்.

அன்பே! மேலே நான் எடுத்துக் காட்டிய சம உரிமைகளுக்கும் தனி உரிமைகளுக்கும் உத்தரவாதம் அளிக்கிற சூழ்நிலையில்தான், பெண்களின் புதிய சமத்துவம் தழைத்துச் செழிக்கச் சாத்தியக் கூறு உண்டு. இதுதான் 'புதுமைப் பெண்'ணின் கண்ணோட்டம்; உலக முழுவதிலும் சமதர்மிகளின் கண்ணோட்டமும் இதுவே.

மேற்கூறியவைகளும், விட்டுப் போனவைகளும், தெரிந்தவைகளும், தெரியப் போகிறவைகளுமான வாய்ப்புகளும் வசதிகளும் முழு நிறைவாகக் கிடைக்கிறபொழுது, பெண்களின் பல்வேறு திறமைகளும், படைப்பாற்றல்களும் பல்கிப் பெருகி வளர்ச்சி அடையும். சமூக, பொருளாதார, அரசியல், கலாசாரத் துறைகளின் பல்வேறு கிளைகளிலும் பெண்ணின் திறமையும் ஆற்றலும், ஆணோடு இணைந்து பிணைந்து நிற்கும்.

அன்று, பெண் மனித வாழ்வுக்குத் தனது முழுப் பங்கைச் செலுத்துவாள். இந்த மண்ணுலகம் பொன்னுலகமாக மலர்ந்து மணக்கும்.

இந்தக் கடிதத்தில் இதுவரை கூறிய கருத்துக்களில் உனக்குப் பிடித்தமான கருத்துக்களை, நீ தன்மயம் ஆக்கிக் கொள்வாய் என்பது உறுதி. அதோடு, என் கடிதத்தோடு அழிந்து போகாத அந்தக் கருத்துக்களை, உனக்கு இயல்பான ஆழமான உணர்ச்சியோடு, மிக அழுத்தமாக அழகாக உனது சகோதரிகளுக்கும் எடுத்துச் சொல்வாய் என்று எதிர் பார்க்கிறேன்.

பூரணச் சந்திரனைக் கண்டு பொங்கும் கடல்போல் பெண்ணுரிமை வளர்ச்சியைக் கண்டு ஆணினம் முழுதும் மகிழ்ச்சியில் துள்ளும் காலம் தூரத்தில் இல்லை.

## கடிதம் 4

அன்பு மிக்க......

உனது மகிழ்ச்சி மடல் கைவரப் பெற்றேன். தவறு...நீ ஒரு வாரத்திற்குள் உள்ளக் கிளர்ச்சியோடு தீட்டிய இரண்டு கடிதங்களும் கைவரப் பெற்றேன்.

இரண்டு கடிதங்களும் எனது கடிங்களைப் பற்றிய எதிரொலிச் சித்திரங்களே.

உனது மகிழ்ச்சி உணர்ச்சியை இந்தக் கடிதங்களில் கொட்டிக் குவித்திருக்கிறாய். உனது சகோதரிகளுக்கு நீ என் கடிதங்களைக் காட்டியதாகவும், அவர்கள் தங்கள் மகிழ்ச்சியை உன்னிடம் தெரிவித்ததாகவும், அவர்கள் சார்பில் நீ எனக்கு நன்றி செலுத்த வேண்டுமென்று அவர் உன்னிடம் கேட்டுக் கொண்டதாகவும் நீ எழுதியிருக்கிறாய்.

என் கடிதங்களை நீ அக்கறையோடு முறையாகப் படிப் பதையும், உன் சகோதரிகளுக்குக் கொடுத்து அவர்களை முறையாகப் படிக்க வைப்பதையும் அறிய, நான் பெருமிதம் அடைகிறேன்.

உனது சகோதரிகளின் வேண்டுகோள், கடிதங்களை இடைமுறியாமல் நான் தொடர்ந்து எழுத வேண்டும் என் பதே என்றும், இந்த எழுத்து, புதுமைப் பெண்களுக்கு மிகவும் பயன்படுமென்றும் நீ எழுதியிருக்கிறாய். இது, உண்மையாகச் சொல்கிறேன், அன்பே! எனது பொறுப் புணர்ச்சியை ஊக்கியிருக்கிறது.

இன்னும், எனது பிரதிபலிப்பு ஒன்றைச் சொல்கிறேன், கேள்.

நிலம், நீர், நெருப்பு, காற்று ஆகிய எல்லாம் எல்லாச் செடிகளுக்கும் பொதுவாயிருக்கின்றன. ஆனால், ஒவ்வொரு செடியிலும் ஏறிய சாரம் அதனதன் இயல்புக்கு

ஏற்றபடி மாறுகிறது. எலுமிச்சம் பழத்தில் ஏறிய சாரம் புளிப்படைகிறது. மாதுளங்கனியில் ஏறிய சாரம் மதுரம் அடைகிறது. ஒரு செடி விஷமாவதையும், ஒரு செடி உணவுப் பொருளாவதையும் பார்க்கிறோம். இந்த வேற்றுமை நில வேற்றுமையாலோ நீர் வேற்றுமையாலோ ஏற்பட்டதல்ல. மழை ஒன்றாயினும் மழைநீர் விழுந்த மண்ணின் குணம் அடைகிறது. இவ்வாறு வித்தியாசப் படுகிற குணம், பூசாரம், நீர், சூரிய ஒளி, காற்று ஆகிய வற்றில் இல்லை. வேர் அமுதமும் கனி நஞ்சுமான பல செடிகள் உள. இந்த மயக்கம், அந்தச் செடிக்குள்ள ஒரு ஜீவகுணமேயன்றி வேறன்று.

ஏன் இவ்வளவு தூரம் எழுதினேன் தெரியுமா?

நான் எழுதும் கடிதத்தை அல்லது கடிதங்களை ஒவ்வொருவர் ஒவ்வொரு மாதிரிப் புரிந்து கொள்கிறார்கள்; புரிந்து கொள்வார்கள். நீ எனக்குப் பதிலெழுதும் கடிதங் களில் நீ வெளியிடும் பிரதிபலிப்புகளிலிருந்து நீ எனது கடிதங்களை எப்படிப் புரிந்து கொள்கிறாய் என்பது எனக்கு நன்றாகத் தெரிகிறது. உனது பிரதிபலிப்புகளில் உனது தனி இயல்பு நிழலாடுகிறது.

உனது பிரதிபலிப்பு மிகமிக உயர்தரமான பிரதிபலிப்பு. இதை நான் சொல்வதைவிட மற்றவர் சொல்ல நான் காது குளிரக் கேட்க வேண்டும். நிற்க.

சென்ற கடிதத்தில் உனக்கு நான், 'புதுமைப் பெண்' ணின் கண்ணோட்டத்தை எடுத்துக் காட்டினேன் அல்லவா, ஆமாம். இந்தக் கடிதத்தில் பெர்னாட்ஷா சொன்ன ஒரு கருத்தையும் இணைத்துச் சொல்ல விரும்பு கிறேன்.

உனக்கு ஷா யார் என்று தெரியுமா? பார்த்தாயா, மறந்து விட்டேன். நான்கு ஆண்டுகளுக்கு முன், நான் உன் அண்ணனோடு உங்கள் வீட்டுக்கு வந்ததும், என்

கையிலிருந்த "கடவுளைத் தேடிச் சென்ற கருப்புப் பெண்" என்ற நூலைப் படித்து விட்டுத் தருவதாக வாங்கிப் படித்துவிட்டு மறு நாளே நீ திருப்பித் தந்து விட்டதும் உனக்கு நிச்சயம் நினைவிருக்கும்; நீதான் நினைவாற்றல் மிக்கவளாயிற்றே.

ஆகவே ஷா இருபதாம் நூற்றாண்டு ஷேக்ஸ்பியர் என்பதும், உலகப் பேரறிஞர்களில் ஒருவர் என்பதும், மகா கிண்டல்காரர் என்பதும் மூலக் கருத்து மிக்க சோஷலிஸ்டு என்பதும் உனக்குத் தெரிந்திருக்கும்.

அப் பெரியார் கூறிய ஒரு கருத்தைத்தான் உனக்குச் சொல்ல வந்தேன். ஷா சொல்லுகிறார்:

"பெண்ணே ஆணைப் படைத்து வளர்ப்பவள். பெண்ணே ஆணை ஆட்கொண்டு வாழ்விப்பவள். உலக நடவடிக்கைகளில் பெண்கள் முழுப்பங்கு கொண்டு உழைக்க வேண்டும். அவ்வாறு உழைத்தால் அல்லாமல் உலகம் ஒருநாளும் நல்ல அமைதியான நிலைமையை அடைய முடியாது" என்று.

ஷா, 'சோஷலிஸம் முதலிய இஸங்களைப்பற்றி மதிநுட்பமுள்ள பெண்ணுக்கு வழிகாட்டி' என்று ஒரு நூல் எழுதியிருக்கிறார். அதில் நான் மேலே குறிப்பிட்ட கருத்தை விளக்குகிறார்.

அன்பே! நீ அவசியம் படிக்க வேண்டிய நூல் அது. நீ ஏற்கனவே அந்த நூலைப் படித்திருக்கவும் கூடும். படித்திருந்தால்கூட, எனக்காக இன்னொரு முறை படி. புதுமைப் பெண்ணின் கண்ணோட்டத்தை நீ அதில் நன்றாகக் காணக் கூடும். உனது சகோதரிகளுக்கும் அதைப் படிக்கும்படி பலத்த சிபார்சு செய்!

நம் நாட்டின் தொன்மை சான்ற சங்க இலக்கியங்கள் திருக்குறள், ஐம்பெருங் காப்பியங்கள், கம்பன் காவியம்

ஆகிய நூற்களையும், உலக இலக்கியங்களையும் குறிப்பாகச் சென்ற நூற்றாண்டு இந்த நூற்றாண்டுகளின் நவீன இலக்கியங்களையும், உன்னைப் போன்ற படித்த பெண்கள், படிக்க வேண்டும். அவற்றில் பரக்கக் காணக் கிடக்கும் பெண்ணைப் பற்றிய மதிப்பீடுகளை, பெண்-ஆண் உறவு, தொடர்பு பற்றிய வரையறுப்புகளைக் குறிப்பிட்டு அலசிப் பார்க்க வேண்டும். இந்த அணுகு முறையும், அறிவும் புதுமைப் பெண் கண்ணோட்டத்தை நன்கு அறிய மிகமிகத் தேவை.

பாரதியின் ''புதுமைப் பெண்'' கண்ணோட்டத்தைப் பற்றி உனக்குப் பின்னர் எழுதுவேன். இங்கு பாரதியின் ஒரு கருத்து மட்டும் தேவை; அதைக் றிப்பிடுகிறேன். பாரதி எழுதியுள்ள தீர்க்க தரிசனம் மிக்க ''புதுமைப் பெண்'' என்ற பாடலில் அந்தக் கருத்து வருகிறது. அது இது:

''புதுமைப் பெண்ணிவள்
சொற்களும் செய்கையும்
மொய்மைகொண்ட
கலிக்குப் புதிதன்றி
சதுர்மறைப்படி
மாந்தர் இருந்தநாள்
தன்னிலே பொது
வான வழக்கமாம்''

இந்த அடிகளில் பாரதி கூறுவதைக் கேள்.

இன்றைய புதுமைப் பெண்களின் கருத்தும் செயலும், கலியுகத்திற்குப் புதிதேயன்றி, கிருத யுகத்தில் சாதாரணமான வழக்கம்தான் என்கிறான் பாரதி. அன்பே! பாரதியின் கலியுக கிருதயுகக் கருத்துக்களுக்கும், பஞ்சாங்கக்காரனின் கலியுக கிருதயுகக் கருத்துக்களுக்கும், மலைக்கும் மடுவுக்குமுள்ள வேற்றுமையுண்டு என்பதை நீ நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும்.

கூறிய பொற்காலத்தில், பெண்ணைப் பற்றிச் சமுதாயக் கண்ணோட்டம் எப்படியிருந்தது என்பதை அறிய நீ மிகவும் விரும்புவாய். மதிநலமும், கல்விநலமும் வாய்ந்த உனக்கு, இதுபற்றி ஒன்றுமே தெரியாது என்று நினைத்து நான் எழுதவில்லை. உனக்கும், நான் எத்தகைய கருத் தோட்டமுள்ளவன் என்று தெரியும். சரி, இது இருக்கட்டும்.

தமிழனுடைய தொன்மையான நூல் எது? இருந்ததாகச் சொல்லப்படுகிற நூல் அல்ல; இப்பொழுது இருக்கிற நமக்குக் கிடைக்கிற நூல்களில் தொன்மையானது எது? பெரும்பாலான அறிஞர்கள் தொல்காப்பியமே தொன்மையான நூல் என்று கருதுகிறார்கள். ஆயினும் பேரறிஞர்களில் இரண்டொருவர் தொல்காப்பியம் பிற்கால நூல் என்றும் கருதாமலும் இல்லை.

நான் முதலில் 'தொல்காப்பியத்'தை எடுத்துக் கொண்டு, அது காட்டும் பெண்கள் பற்றிய கண்ணோட்டத்தை உனக்குக் காட்டுகிறேன். அப்பால் சங்க இலக்கியக் கண்ணோட்டத்தைக் காட்டுவேன். கனிந்த தமிழ்ப் பற்றுடைய நீ இதை மிகமிக விரும்பிப் படிப்பாய் என்பது எனது நம்பிக்கை.

தொல்காப்பியர் இலக்கண மேதையல்லவா? அவர், தமிழ்ப் பெருமக்கள் ஆணைப் பற்றியும் பெண்ணைப் பற்றியும் கொண்டிருந்த மரபுக் கருத்துக்களை இரண்டு சிறிய சூத்திரமாக்கி நமக்கு அருளுகிறார்.

"பெருமையும் உரனும்
ஆடூஉமேன"

(களவியல் 7)

"அச்சமும் நாணும்
மடனும் முந்துறுத்தல்
நிச்சமும் பெண்பாற்கு
உரிய என்ப"

(களவியல் 8)

"பெருமையும் அறிவு - வலிமையும் ஆண்பாலார்க்கு உரியவை. அச்சம், நாணம், மடம் என்ற இயல்புகள் எப்பொழுதும் பெண்பாலார்க்கு உரியவாம்" மேற்படிச் சூத்திரங்களின் பொருள் இதுதான்.

அன்றைய இந்தத் தமிழ் மரபுக்கு உனது பெண்மை எப்படி எதிரொலிக்கிறது என்பதை உடனேயே அறிய விரும்புகிறேன். எனவே, அன்பே! எனது கடிதம் கிடைத்ததும் இந்தக் கருத்துக்குரிய உனது உடன்பாடு முரண்பாடுகளை உடனேயே எழுதுவாய் என்று எதிர்பார்க்கிறேன்.

அடுத்த கடிதத்தில் நான் தொல்காப்பியர் கண்ணோட்டத்தை - பழைய தமிழ் மரபுக் கண்ணோட்டத்தை- விளக்கி விமர்சிப்பேன். இடந் தந்தால், அடுத்த கடிதத்தில் சங்க இலக்கியக் கண்ணோட்டத்தையும் தொடங்கி வைப்பேன். பிற பின்.

## கடிதம் 5

அன்பு மிக்க.........

நான் எனது சென்ற கடிதத்தில், எடுத்துக் காட்டிய தொல்காப்பியச் சூத்திரங்களின் மீது உனது பிரதிபலிப்பு என்ன என்று உடனடியாக நீ எழுத வேண்டுமென்று கேட்டிருந்தேன். எனது அன்பு ஆணை நிச்சயம் மதிக்கப்படும் என்றும் நம்பினேன்.

ஆனால், உனது கடிதம் 'வரும்' 'வரும்' என்றுஎதிர் பார்த்துப் பார்த்து என் கண் பூத்துப் போயிற்று.

அன்பே! எனது கடிதங்களுக்கு எல்லாம் இதுவரை நீ சுடசுடப் பதில் கொடுப்பதுதான் வழக்கம். 'தாமதித்தாய்' என்று உன் மீது குறை கூற எனக்கு ஒரு வாய்ப்பு கூட நீ அளித்ததில்லை.

சென்ற கடிதத்திற்குப் பதில் எதிர்பார்த்த அன்றும் கிடைக்கவில்லை; மறுநாளும் கிடைக்கவில்லை; மறு நாளுக்கு மறுநாளும் கிடைக்கவில்லை. இன்று இந்தக்கடிதம் எழுதுகிற இந்த நேரம் வரையிலும் கிடைக்கவில்லை.

ஒரு புறம் உன் பதில் கிடையாமையால் என் நெஞ்சம் கவல்கிறது. மறுபுறம், எதிர்பாராத இடையூறு ஏதேனும் ஏற்பட்டிருந்தாலன்றி நீ எழுதாதிருக்க மாட்டாய் என்று என் அந்தராத்மா சொல்கிறது.

உனது பிரதிபலிப்புத் தாங்கிய பதில் கடிதம் காலா காலத்தில் கிடைத்திருந்தால் என் மனம் எப்படி இருந் திருக்கும் தெரியுமா? நாணேற்றிய வில் மாதிரி 'விண்' என்று இருந்திருக்கும். இன்று என் மனதில் ஏதோ ஒரு தொய்வு ஏற்பட்டிருகிறதே, அதுமாதிரி லவலேசமும் ஏற்பட்டிருக்காது.

அடுத்த கடிதத்தில், நீ வட்டியும் முதலுமாய் உனது பிரதிபலிப்பைத் தெரிவிப்பாய் என்ற முழு நம்பிக்கை என்னைப் பிடரி பிடித்து உந்தவே, இந்தக் கடிதத்தை எழுதுகிறேன்.

இந்தக் கடிதத்தை எப்பொழுது எழுதுகிறேன் தெரி யுமா? மேற்கூறிய சூழ்நிலையோடு, உடல் நிலையும் மோச மடைந்திருக்கிறபொழுது எழுதுகிறேன். உடல் நோயின் காரணமாக, ஊசிகள் போட்டு, மாத்திரைகள் உண்டு, வெப்ப மிகுதியின் விளைவாக, தலையில் கட்டிகள் தோன்றி, நெருப்புப் பிடித்து எரிவது போன்று தலை ஒரே எரிச்சலாக எரிகிற பொழுது இந்தக் கடிதம் எழுது கிறேன். அதற்கும் மேலாக இரவு 2-40க்கு ஒரு ரயில் வண்டியைப் பிடிக்க வந்து, ரயில்வே நிலையத்திற்கு அருகாமையில் உட்கார்ந்து 12-மணிக்குமேல் இதை எழுதுகிறேன்.

கடமை உணர்ச்சி ஒன்று மட்டும் வற்புறுத்தவே இந்த மடலைத் தீட்டுகிறேன். இந்தச் சுய புராணப் பாராயணம்

இங்கு நிற்கட்டும். இனிச் சென்ற கடிதத்தில் விட்ட குறையைத் தொடர்கிறேன்.

''பெருமையும் அறிவு—ஆற்றலும் ஆடவர்க்கு உரியவை. அச்சம், நாணம், மடம் பெண்டிர்க்கு உரியவை'' என்று தொல்காப்பியம் சொல்கிறது என்றும், அன்று தமிழர் மரபு இப்படி இருந்தது என்று சொல்கிறது என்றும் எடுத்துக் காட்டினேன்.

இந்த மரபு, பண்டு நம் நாட்டினர் மதித்துவந்த ஒரு லட்சியத்தை எடுத்துக் காட்டுகிறது என்று நான் நினைக்கிறேன். அன்று இந்த லட்சியம் வாழ்வில் எவ்வளவு தூரம் பொருந்தியிருந்தது என்று அலசிப் பார்க்க இன்று நமக்குத் தேவையில்லை.

இன்றைய நிலையில் இந்த மரபை ஒப்புக்கொள்ள முடியுமா? சமத்துவம் பாராட்டும் தற்கால ஜனநாயக வாழ்வில் மேற்படி மரபுக்கு இடமில்லை என்பது தெளிவு.

ஜனநாயகப் பெரும் புலவனான பாரதி, இந்த மரபுக்குப் பதில் சொல்லுவதைக் கீழே தருகிறேன். பாரதியின் இந்த அடிகள் உனக்கு மிக நன்றாகத் தெரிந்த அடிகளே.

> ''நாணும் அச்சமும்
> நாய்கட்கு வேண்டுமாம்
> ஞானம் நல்லறம்
> வீர சுதந்திரம்
> பேணும் நற்குடிப்
> பெண்ணின் குணங்களாம்''

(புதுமைப் பெண்

எத்துணை காரசாரமாகப் பழைய மரபின் மீது, பாரதியின் 'புதுமைப் பெண்' கண்டனக் கணை பாய்ச்சுகிறாள் பார்த்தாயா? நீயும் புதுமைப் பெண். உனது

எதிரொலி வேறுவிதமாக இருக்க முடியாது. நானும் ஒரு ஜனநாயகவாதி. எனது பிரதிபலிப்பும் வேறு வகையாக இருக்க முடியாது.

இனி, 'தொல்காப்பியம்' பயிலும் வேறொரு கருத்தைப் பார்ப்போம்:

> ''உயிரினும் சிறந்தன்று
> நாணே; நாணினும்
> செயிர்தீர் காட்சிக்
> கற்புச் சிறந்தன்று''

(தொல். களவியல் 23)

முற்காலத்துத் தமிழ் மக்கள் குடும்ப வாழ்விலேயே பெரிதும் ஈடுபாடு உடையவர்களாய் இருந்தார்கள். எனவே, அடக்க ஒடுக்கத்தோடு,கற்பு நெறியில் ஒழுகிய மனைவியை அவர்கள் பெரிதும் பாராட்டினார்கள்.

அக் காலத்துப் பெண்கள் இல்லக் கிழத்தியராயிருத்தலையே பெருமையெனக் கருதினார்கள். சமுதாய வளர்ச்சியில் குடும்பம் நடத்தும் பொறுப்பே பெண்களின் பெரும் பொறுப்பாக அன்று அமைந்திருந்தது.

சமைத்து, ஆண்களுக்கு அமுது ஊட்டும் பெருந்தொழில் பெண்களின் தனி உரிமையாகத் திகழ்ந்தது. இதை, அன்பே! தொல்காப்பியர் ஒரு சூத்திரத்தின் மூலம் எவ்வளவு அழகாகக் கூறுகிறார், கேள்!

> ''ஏனது சுவைப்பினும்
> நீ கை தொட்டது
> வானோர் அமுதம்
> புரையுமால் எமக்கென''

(தொல். கற்பு 5)

கணவன், மனைவியின் கைப்பட்ட உணவு எதுவும், தேவாமுதத்தினும் சுவை மிக்கது என்று அன்று நுகர்ந்து மகிழ்ந்தான் என்று தொல்காப்பியர் தெரிவிக்கிறார்.

> ''விருந்து புறந்தருதலும்
> சுற்றம் ஓம்பலும்
> பிறவும் அன்ன
> கிழவோள் மாண்புகள்''

என்பது தொல்காப்பியத்தில் மற்றொரு (கற்பு. 11) சூத்திரம்.

விருந்தாளிகளைப் போற்றுதல் மனைவியின் சிறந்த கடமைகளுள் ஒன்றாக அன்று இருந்தது என்பதையும் தொல்காப்பியர் நமக்கு அறிவிக்கிறார்.

அன்பே, நான் மேலே கூறிய சில 'தொல்காப்பிய'ச் சூத்திரங்களிலிருந்து, பண்டைய தமிழ்ச் சமுதாயத்தில், பெண்ணின் இடம், பெண்ணின் தரம், பெண்ணின் குணம் எப்படியிருந்தன என்பதை நீ நன்றாக உணர்ந்துகொள்ள முடியும்.

நீ எந்த நூலையும் ஏனோதானோ என்று படித்துத் தெரிந்து கொள்பவளல்ல. நான் உன்னிடம் ஒருமுறை சொன்னேன். 'மருந்து சாப்பிடுவது போலவே நூல்களைப் படிக்க வேண்டும்—விளம்பரங்களைப் பார்த்தன்று செய்ய வேண்டும், விஷயமறிந்தவர்களின் சிபார்சின் மேலேயே செய்யவேண்டும்' என்று. இந்த உண்மையை நீ தக்க தருணங்களில், மறந்துவிடாமல் எனக்கு நினைப்பூட்டி வந்திருப்பது, இன்றும் எனது நினைவில் பசுமையாக இருந்து வருகிறது.

தொல்காப்பியத்தில் ஆழ்ந்த அறிவு பெறும் திறன் படைத்த நீ இனிச் சும்மா இருக்கமாட்டாய். நான் குறிப்பிட்ட சூத்திரங்களோடு நில்லாமல், 'களவியல்' முழுவதையும் கற்க முயல்வாய். முயற்சியில் வெற்றி காண்பாய்.

பின்னர், பொருளதிகாரம் முழுவதையும், அப்பால் தொல்காப்பியம் முழுவதையுமே கற்றுத் தெளிவாய். இதில், எனக்கு இம்மி கூடச் சந்தேகமில்லை.

தொல்காப்பியம் காட்டும் பெண்கள் பற்றிய தமிழ் மரபுக் கண்ணோட்டத்தைத் தெளிவாக அறிந்துகொண்டால் சங்க இலக்கியத்தில் ஊடுருவி நிற்கும் பெண்கள் பற்றிய கண்ணோட்டத்தை அறிதல் சுலபம் என்பதை நீ நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். நினைவில் வைத்துக் கொள்வாய் என்று நம்புகிறேன்.

இது தமிழின் மறுமலர்ச்சிக் காலம். தொல்காப்பியத் திற்கும் சங்கநூல்களுக்கும் பெருமை என்றுமில்லாதபடி பெருகி நிற்கும் காலம். இதுவும் உனக்குத் தெரியாததல்ல.

இப்பொழுது இரவு மணி 1-40. இன்னும் 5 நிமிடங் களில் அஞ்சலில் சேர்த்தாக வேண்டும். எனவே, இத்துடன் முடிக்கிறேன்.

பிற அடுத்த மடலில்.

## கடிதம் 6

அன்பு மிக்க.........

"அனுபவம் தாய்ப்பால் போன்றது; சிந்தனை பசுவின் பால் போன்றது; நூல் படிப்பு புட்டிப்பால் போன்றது" என்று நான் அடிக்கடி சொல்வதுண்டு. நூலறிவைவிடச் சிந்தனை அறிவும், சிந்தனை அறிவைவிட அனுபவ அறிவும் சிறந்தது என்பதை எடுத்துக் காட்டவே, புட்டிப் பால், பசுவின் பால், தாய்ப்பால் ஆகியவற்றை உவமித்து ஒப்பு நோக்கக் காட்டுவேன். உன்னிடத்திலும் அனுபவத் தின் பெருமையை வலியுறுத்திக் கூற இந்த உண்மையை இரண்டொரு முறை விளக்கியிருக்கிறேன் என்று நினைவு.

உன்னுடைய அன்புக் கடிதத்தைப் படித்ததும் இந்த நினைவு பளிச்சிட்டது. நான் எதிர்பார்த்தபடியும் சென்ற கடிதத்தில் குறிப்பிட்டிருந்தபடியும், வட்டியும் முதலுமாக உனது எதிரொலியை உனது கடிதம் சுமந்து வந்திருக் கிறது.

ஒருபுறம் உனது படிப்பும் எழுத்தும் என்னைத் தேன் குடித்த நரி மாதிரிச் சொக்க வைக்கிறது. மற்றொருபுறம், தனக்குத்தானே உண்மையை உணர்கிற சுயானுபூதி இருக் கிறதே, அது மிகப் பெரிது என்ற உண்மையை அது என் மனதில் என்றுமில்லாதபடி வெளிச்சம் போட்டுக் காட்டு கிறது.

தொல்காப்பியக் கருத்தின் மீது நீ எதிரொலித்திருப் பதைப் படிக்கும்பொழுது இவ்வளவு நுட்ப திட்பமான தொல்காப்பிய அறிவை நீ எங்கே எப்பொழுது பெற்றாய் என்று மூக்கின்மேல் விரல்வைத்து வியப்படைய வேண்டிய தாயிருக்கிறது. உனது கருத்தோட்டமும், எழுத்துப் பாணியும், வெறும் பேச்சுப் பேசுவது, நம்புவதற்கு மாத்திரமே முயல்வது, இருட்டில் வீணாகத் தடவிக்கொண் டிருப்பது, நுனிப்புல் மேய்வது, முன்னோர் சொற்களைக் கிளிப்பிள்ளை மாதிரிச் சொல்வது என்ற போக்குக்கும் உனக்கும் இரத்த சம்பந்தம், அர்த்த சம்பந்தம், திக்கு சம்பந்தம்கூடக் கிடையாது என்பதைப் பறையறை கின்றன.

அன்பே! நீ எனக்குத் தீட்டியுள்ள கடிதத்தில், ''அச்சம், நாணம், மடம்'' ஆகியவற்றின் தொகுதியே 'பெண்மை' என்ற தொல்காப்பியக் கருத்தின் மீது உனது பிரதிபலிப்பைத் தெரிவித்திருக்கிறாய். அச்சம் நாணம், மடம் ஆகிய முக்குணங்களுக்கும் முற்கால (தொல்காப்பியர் கால), இடைக்காலக் கருத்துக்களைக் கூறி, உனது எதிரொலியைத் தீட்டி இருக்கிறாய்.

தொல்காப்பிக் கருத்து:

அச்சம்—தீவினைகளுக்கு அஞ்சுதல்.

நாணம்—பழி பாவங்களுக்கு நாணுதல்.

மடம்—கொளுத்தக்கொண்டு கொண்டது; விடாமை.

(சான்றோர் கொள்கைகளை அறிவுறுத்த ஏற்றுக் கொண்டு, அவ்வாறு ஏற்றுக் கொண்ட கொள்கை களில் மிக உறுதியோடு இருத்தல் )

இதை, நச்சினார்க்கினியர் போன்ற உரையாசிரி யர்கள் கொடுக்கும் விளக்க உரை என்று நீயே குறிப்பிடு கிறாய்.

இடைக்காலக் கருத்து:

அச்சம்=பிறரைக் கண்டு அஞ்சுதல்.
—பயங்கொள்ளித்தனம்

நாணம்=நடக்கும்போது பெண்கள் தலைகுனிந்து கட்டை விரலைப் பார்த்தே நடத்தல்:
—வெட்கம்.

மடம்=அறிவீனம்.

சதகங்கள் முதலிய இடைக்காலப் பிரபந்தங்கள் இவ்வாறு விளக்கம் அளிக்கின்றன என்றும் நீ சுட்டிக் காட்டுகிறாய்.

மேற்கூறியவாறு எடுத்துக் காட்டிவிட்டு, இரண்டுவிதக் கருத்துக்களையும் நீ ஒப்புக் கொள்ளவில்லை என்று கூறுகிறாய்.

“நான் புதுமைப் பெண்; ஆணும் பெண்ணும் சரிநிகர் சமானம். எனவே, எத்துறையில் பெண்ணை எந்த வகையில் குறை கூறினாலும் நான் ஏற்கமாட்டேன். ஆகவே ‘பெண்மை’யைப் பற்றிய பண்டைக்கால, இடைக்

காலக் கருத்தை நான் துளிகூட ஏற்றுக்கொள்ளவில்லை. தொல்காப்பியக் கருத்தையும் பிரபந்தக் கருத்தையும் ஆழக் குழி தோண்டிப் புதைக்க வேண்டும்'' என்று நீ வெட்டொன்று துண்டு இரண்டாக எதிரொலிக்கிறாய்.

''தீவினைகளைக் கண்டு அஞ்ச வேண்டுமென்றால், அந்த அச்சம் ஆணுக்கும் பெண்ணுக்கும் பொதுவாக இருக்க வேண்டியது அல்லவா? பழி பாவங்களுக்கு நாணமுற வேண்டுமென்றால், பெண்போல் ஆணும் நாணமுற வேண்டும்; அதுதானே முறை? சான்றோர் நெறியை உறுதியாகக் கடைப்பிடித்தலில் ஆணுக்கு ஒரு நீதி, பெண்ணுக்கு ஒரு நீதி இருக்க இடமில்லை. ஆகவே, தொல்காப்பியர் 'பெண்மை'யின் குணக்கூறுகளை வரையறுப்பதை ஏற்றுக்கொள்ளவோ, போற்றிப் புகழவோ என்னால் முடியவில்லை'' என்றும் பிரதிபலிப்பைத் தெக்கத் தெளிவாய்த் தீட்டி இருக்கிறாய்.

சமதர்மப் பெண்ணைப் போலவும், பாரதியின் 'புதுமைப் பெண்'ணைப் போலவும், புதுமைப் பெண்ணான உனது கருத்தும், இந்தப் பிரச்சினையில் சரியான திசையில் செல்கிறது என்பதுதான் எனது கருத்து.

ஆனால் ஒன்று. உனது கடிதத்தில், நான் எனது ஐந்தாவது கடிதத்தில் எடுத்துக் காட்டிய பாரதி கருத்தைச் சுட்டிக்காட்டி, பாரதி இடைக்கால மரபின் மீதுதான் கண்டனக்கணை பாய்ச்சியிருக்கிறான் என்றும், தொல் காப்பிய மரபின் மீது அல்ல என்றும், குறிப்பிட்டு என்னோடு மாறுபாட்டை நயம்பட ஆனால் அழுத்தமாகத் தெரிவிக் கிறாய். நன்று, மிகவும் நன்று.

வரலாற்றில் சமுதாய மாறுதல்களையும், இந்த மாறுதல் களில் பெண்ணின் இடத்தையும், கருத்துக்களின் எழுச்சி யையும் பற்றிப் பின்னால் எழுதப்போகும் கடிதங்களில் கூறுவேன். ஆனால் இங்கு சில உண்மைகளை நீ தொல்

காப்பியக் கருத்தை மீண்டும் நிர்ணயித்துக் கொள்ள உதவும் பொருட்டுக் கொடுக்கிறேன்.

1. தொல்காப்பியர் காலம் அல்லது தொல்காப்பியம் கூறும் தமிழர் மரபுக்காலம், புராதனப் பொது உடைமைக் காலமும் அல்ல. தமிழகத்தின் நிலப் பிரபுத்துவக் காலம்—2500 ஆண்டுகளுக்கு முன்.

2. நச்சினார்க்கினியர் முதலிய உரையாசிரியர்களின் விளக்கங்களில் அவர்களின் கருத்துக்கள் ஆதிக்கம் செலுத்து கின்றன. இந்த உரையாசிரியர்கள், தொல்காப்பியருக்கு மிக மிகப் பிற்பட்ட காலத்தில் வாழ்ந்தவர்கள்.

3. தொல்காப்பியம்-களவியல், கற்பியல் மட்டுமல்ல, முழு நூலையும் சரித்திரக் கண்ணோட்டத்தோடு கற்க வேண்டும்.

அன்பே! எனது இந்த யோசனைகளைக் கவனத்தில் வைத்துக் கொண்டு இனிவரும் எனது சிலபல கடிதங் களைப் படிக்கிறபொழுது, உனது கண்ணோட்டத்தில் மாறுதலும், தொல்காப்பியக் கருத்து நிர்ணயத்தில் மாறு தலும் உனக்கு ஏற்படும் என்று நிச்சயமாக நம்புகிறேன். நிற்க.

ஆண் உயர்வு பெண் தாழ்வு என்ற அடிச்சரட்டுக் கருத்துத்தான் தொல்காப்பியத்தில் ஊடுருவி நிற்கிறது. அந்தக் காலத்தில், ஆண் ஆளப்பிறந்தவன், பெண் அண்டி ஒண்டி வாழப்பிறந்தவள் என்ற கொள்கைதான் சமுதாயத் தில் ஆட்சி செலுத்திற்று.

அன்று, ஆண்-பெண் குணங்களைப் பிரித்துத் தனிமைப்படுத்திக் காட்டினார்கள்; ஆண்-பெண்களுக் கிடையில் உயர்வு-தாழ்வு கற்பித்தார்கள். இதை முன் கடிதங்களில் சில தொல்காப்பியச் சூத்திரங்கள் மூலம் காட்டியிருக்கிறேன்.

இன்னும் இரண்டொரு உதாரணங்கள் கொடுக்கிறேன். படித்துச் சிந்தித்துப் பார்.

கடல் கடந்து செல்லும் ஆடவர்-பொருள் ஈட்டவோ வேறு எந்தக் காரியத்திற்கோ சென்றாலும் சரி-பெண்டிரை அழைத்துச் செல்லும் வழக்கம் அந்த நாளில் தமிழகத்தில் இல்லை என்று தொல்காப்பியர் கூறுகிறார். அவர் கூறும் சூத்திரம் இதோ:

> "முந் நீர் வழக்கம்
> மகடூஉ வோடில்லை"
>
> -(தொ-பொ-அக. 37)

அதுபோல், அந்தக் காலத்தில், போர்க்களத்துப் படை வீட்டுக்கும் பெண்களோடு ஆண்மக்கள் போகமாட்டார்கள் என்று தொல்காப்பியர் தெரிவிக்கிறார். சூத்திரம் இதுதான்

> "எண்ணரும் பாசறை
> பெண்ணொடும் புணரார்"
>
> -(தொல்-பொ-கற்பு 34)

பெண்கள் கப்பலேறி வெளிநாடுகளுக்குச் செல்லக் கூடாது. வீராங்கனைகளாக ஆடவர் மாதிரிப் போர்க்களம் புகக்கூடாது என்ற இம் மாதிரியான சமுதாயச் சட்டங்களூ. எதைக் காட்டுகின்றன? அன்று, ஆண் தங்குதடையற்ற சுதந்திரம் உடையவனாகவும், பெண், அவன் கீச்சிய கோட்டைத் தாண்டக் கூடாதவளாகவும் கருதப்பட்டார்கள் என்பதைக் காட்டுகின்றன.

தொல்காப்பியர் காலத்தில், ஒழுக்கத்தை எடுத்துக் கொண்டாலும், ஆணுக்கு வேறு, பெண்ணுக்கு வேறு என்றே இருந்திருக்கிறது.

கற்பு: "கற்பு நிலை என்றால் இரு கட்சிக்கும் பொது" என்பதுதான் இன்றைய ஜனநாயக சமுதாயத்தின் நியதி. ஆனால், அன்று அப்படியல்ல.

தொல்காப்பியர் தெய்வப் புலவராக இருக்கலாம். தொல்காப்பியம் ஒப்பற்ற இலக்கண நூலாக முதல் வரிசையில் முதலிடம் பெறலாம். ஆயினும் இலக்கியம் (வாழ்க்கை) கண்டதற்குத் தானே இலக்கணம் கூறமுடியும்!

தொல்காப்பியர் காலத்தில், கற்பு பெண்களுக்குரிய தனி உடைமை என்று கருதப்பட்டு வந்தது. அன்று ஒரு பெண் ஒரே ஆணை மணந்து அவனிடம் இணைபிரியாத காதல் பூண்டு இன்ப வாழ்வு வாழவேண்டும். அதே பொழுதில் ஆண் பல பெண்களோடு வாழ சமுதாய அனுமதி உண்டு.

பெண்ணுக்குக் கற்பே உயிர். ஆண் எவ்வளவு தாறுமாறாகத் தவறு செய்து திரிந்தாலும், பெண் தவறு செய்யாமல் புனிதவதியாக வாழ்ந்து, ஆணுக்குப் பணி விடை புரிவதே, ஆண் காலாலிட்ட பணியைத் தலையால் புரிவதே, கற்புடைமை அழகு.

தொல்காப்பியர் காலத்தில் ஆண் 'லைசன்சோடு' வாழ்ந்தான் என்று தெரிகிறது.

> ''காமக் கிழத்தி
> மனையோள் என்றிவர்''

என்று வரும் கற்பியல் சூத்திரம் மனைவியோடு, ஒரு ஆடவன் காமக் கிழத்தியும் உடையவனாயிருக்கலாம் என்பதை எடுத்துக் காட்டுகிறது. பல தார மணம் அமுலி லிருந்தது அன்று.

மற்றொரு சூத்திரத்தில்,

> ''மாயப் பரத்தை
> உள்ளிய வழியும்''

என்று தொடர் வருகிறது. பரத்தை என்றால் மணந்து கொள்ளாத பொதுமகள் என்று பொருள். பரத்தையர் அக் காலத்தில் விலை மாது, பொருட் பெண்டிர்,

கணிகையர், பொது மகளிர், வரைவின் மகளிர் என்ற பெயர்களாலெல்லாம் அழைக்கப்பட்டார்கள்.

ஆடவன் முதலில் மணந்துகொள்ளும் மனைவி இல்லக் கிழத்தி; வீட்டின் தலைவி. இரண்டாவதாக ஆசைப்பட்டு மணந்து கொள்ளும் பெண்டிர் காமக்கிழத்தியர். மூன்றாவதாகப் பரத்தையர். தொல்காப்பியர் இந்த மூவகையினரைப் பற்றியும் சில கற்பியல் சூத்திரங்களில் நமக்கு இலக்கணம் கூறுகிறார். ஆகவேதான், நச்சினார்க்கினியர் விளக்கத்தில் தொல்காப்பியர் பெண்மையைப் பார்த்தால் போதாது என்று எனக்குப் படுகிறதென்றும், நீ திருப்பிப் படிக்க வேண்டுமென்றும் கூறினேன். இப்பொழுது புரிகிறதா?

இறுதியாக, தொல்காப்பியர் காலத்தில் பெண்-ஆண் சமத்துவம் இல்லை. பெண்ணடிமை முழுக்க முழுக்கக் குடி கொண்டிருந்தது. இந்தப் பெண்ணடிமை முறை வேறு யாராலும் புகுத்தப்பட்டதன்று. சமுதாய வளர்ச்சியில் உலகத்தில் எந்த தேசத்திலும் குறிப்பிட்ட கால கட்டத்தில் ஏற்படுவதுதான். இந்த உண்மையைப் போகப் போக நீ தெரிந்து கொள்வாய்!

அடுத்த கடிதத்தில் சங்க இலக்கியத்தில் புகுவோம்.

## கடிதம் 7

அன்பு மிக்க......

ஆங்கில மொழியில், இலக்கியத் திறனாய்வில் மன்னாதி மன்னன் என்று மதிக்கப்படுகிறவன் யார்? கோலரிட்ஜ் என்பவன். அவன் ஒரு விமர்சகன் மட்டுமல்ல, ஒரு சிறந்த கவிஞனும்கூட.

இலக்கியத்தில் தனி அக்கறை கொண்டுள்ள உனக்கு, ஆங்கில இலக்கியத்தைச் சுவைதட்ட நன்கு பயின்று வருகிற உனக்கு கோலரிட்ஜ் பழக்கப்பட்டவன் என்பது எனக்குத் தெரியும். அதுபோல் கோலரிட்ஜ் எனது நன்மதிப்புக்குரிய கலைஞன் என்பது உனக்குத் தெரியும் என்பது எனக்குத் தெரியும்.

அவன், 'அனுபவம்' கப்பலின் பின்புறமுள்ள விளக்கை ஒக்கும். அது ''கடந்த வழியை மட்டுமே விளக்கமாகக் காட்டும்'' என்று ஒரு சந்தர்ப்பத்தில் கூறினான். சங்க இலக்கியத்தை நினைத்ததும், அவனுடைய இந்தக் கூற்று நினைவுக்கு வந்தது.

நான் இதை எழுதுவதைப் படிக்கும்போது, இன்று ஏன் கடிதத்தை இப்படித் தொடங்குகிறார் என்று நீ புன்முறுவலுடன் சிந்தனையில் ஆழ்வாய் என்று இங்கிருந்தே என்னால் ஊகிக்கமுடிகிறது. உனது மனப்பாங்கையும் குணசீலத்தையும் பழகி அறிந்த நான் இவ்வாறு ஊகிப்பதில் நூற்றுக்குத் தொண்ணூற்றெட்டுச் சதமானம் சரியாக இருக்கும் என்றே நம்புகிறேன்.

ஏன் இந்தத் திசையில் எனது கருத்தும் பேனாவும் ஓடுகின்றன தெரியுமா? உனக்கு ஒரு உண்மையை உணர்த்தத்தான். என்ன அந்த உண்மை?

பழைய இலக்கியம், பண்டைக்காலக் கவிஞர்களின் அனுபவக் களஞ்சியம். ஆகவே, அவற்றில் வரும் செய்திகள் எல்லாம் கடந்துபோன வழியை மாத்திரமே கப்பலின் பின்புற விளக்கைப் போல், அநேகமாகக் காட்ட வல்லவை. ஆகவே அவைகளை முதன்மைப்படுத்தி, நமது அனுபவத்தை இரண்டாந்தரமாக்கி, நாம் புதிய வாழ்வு வாழ முடியாது. இதை முக்கியமாக நீ மனதில் பதித்து வைத்துக் கொள்ளவேண்டும்.

இனி நான் கூறுவதைப் படி.

இந்த நூற்றாண்டில் தமிழில் சிறந்த ஆராய்ச்சி மன்னன் என்று நியாயமாகவே பெயர் வாங்கிய பெரியார் வையாபுரிப் பிள்ளை அவர்கள். அவர் கி. மு. 300க்கும் கி. பி. 300க்கும் இடையிலுள்ள காலத்தைச் சங்ககாலம் என்று கணிக்கிறார். இந்த 600 ஆண்டுகளில் தமிழில் எழுந்த இலக்கியத்தைச் சங்க இலக்கியம் என்று சொல்கிறார். இதை முற்சங்க இலக்கியம் என்றும் பிற்சங்க இலக்கியம் என்றும் பிரித்துக்காட்டுகிறார். வையாபுரிப் பிள்ளையின் காலமதிப்பீட்டை நீ கவனத்தில் வைத்துக் கொள். நான் எழுதப்போவதைப்படி.

சங்க இலக்கியத்தில் சிக்கலற்ற சாதாரணப் பழைய கால வாழ்வைப் பார்க்கலாம். சிற்றூர் வாழ்க்கையை, பேரூர் வாழ்க்கையை, நாட்டு வாழ்க்கையை, நகர வாழ்க்கையை, குழு மக்கள் வாழ்க்கையை, கோனாட்சி வாழ்க்கையை, கோவேந்தனாட்சி வாழ்க்கையைக் காணலாம். ஐந்திணை வாழ்க்கையைப் பார்க்கலாம். பண்பட்ட உழு தொழில், கைத்தொழில், வாணிப வாழ்க்கையைப் பார்க்கலாம். சாதாரண இயற்கையோடு இசைந்த வாழ்விலிருந்து பேரரசு வாழ்வு வரையில் பார்க்கலாம்.

அன்பே! பண்டைய தமிழ்ப் பெருமக்களின் வாழ்வை அறியச் சங்க இலக்கியம் மிகச் சிறந்த கருவூலம். அதிலிருந்து உனக்குப் பற்பல சித்திரங்களைக் காட்டி, பெண்ணைப் பற்றிய கண்ணோட்டம் அதில் எப்படிக் காணக்கிடக்கிறதென்பதைக் காட்டப்போகிறேன்.

முற்சங்க இலக்கியத்தில் புற வாழ்க்கையைப் பற்றிக் கூறுவதில் 'புறநானூறும்', அகவாழ்வைப் பற்றிக் கூறுவதில் 'அகநானூறும்' சிறந்த நூற்கள். இந்த நூற்கள் அனைத்தும் தனித்தனி ஆசிரியர் எழுதிய நூற்கள் அல்ல. இந்த நூற்கள் தொகுப்பு நூற்கள். நூற்றுக்கணக்கான கவிஞர்கள், பல்வேறு காலங்களில்

பல்வேறு இடங்களில் பல்வேறு கருத்தோட்டங்களோடு, பல்வேறு மனிதர்களைப் பற்றிப் பாடிய பாடல்களின் தொகுப்புக்களே மேற்படி நூற்கள்.

ஒரு சமுதாயம் பெண்களுக்குக் கொடுக்கும் உரிமையி லிருந்து, அதனுடைய நாகரிகத்தின் தன்மையையும் பண் பாட்டின் மேன்மையையும் அளவிட முடியும் என்று இன்று அறிஞர்கள் கூறுகிறார்கள். இந்தக் கருத்து உனக்கும் உடன்பாடாகவே இருக்கும் என்று எண்ணுகிறேன்.

இந்தக் கருத்தை நீ நினைவில் வைத்துக்கொண்டு அளந்து பார்க்க, புறநானூற்றில் வரும் சில கருத்துக்களை இந்தக் கடிதத்தில் குறிப்பிட்டுக் காட்ட விரும்புகிறேன்.

''மனைக்கு விளக்காகிய
வாணுதல் கணவன்''

(புறம்: 314)

இந்தப் புறநானூற்றுப் புலவர் பாட்டிலிருந்து, அன்று பெண் மிகப் பெருமையாகப் பாராட்டப்பட்டாள் என்று தெரிகிறது. இல்லற வாழ்விற்கு-குடும்ப வாழ்விற்குப் பெண் அந்த நாளில் மணி விளக்காக ஒளிவிட்டுப் பிரகாசித் தாள் என்று தெரிகிறது.

வேறொரு கருத்தைக் கேள்! சங்க காலச் சான்றோர் களில் மிகச் சிறந்த ஒரு சான்றோர் சொல்லும் கருத்தைக் கேள்:

"மாண்டஎன் மனையொடு
மக்களும் நிரம்பினர்'

(புறம்: 191)

பிசிராந்தையார் என்ற புலவர் பெருமான் ஆண்டில் மிக முதிர்ந்தவராயிருந்தும், அவருக்கு நரை திரை ஏற்பட வில்லை. ஒரு முறை பல சான்றோர்கள் அவரைச் சூழ்ந்துகொண்டு, உங்களுக்கு வயது நூறும் பத்தும் ஆகியும் ஏன் நரைக்கவில்லை என்று கேட்டார்கள்.

அப் பெரியார் நரையாதிருப்பதற்குப் பல காரணங்கள் கூறினார். அவற்றுள் ஒன்று, தம் மனைவி மக்கள் நிறையப் படித்தவர்கள்; அறிவு நிரம்பப் பெற்றவர்கள் என்று கூறினார். எதைக் காட்டுகிறது? அந்தக் காலத்தில் தமிழகத்தில் பெண்கள் ஆண்களைப் போன்று நிறையப் படித்திருந்தார்கள் என்று தெரிகிறது. கவலையற்ற சமுதாய வாழ்வுக்கு பெண்கள் கல்வி-கேள்வி நிரம்பப் பெற்றவர் களாக இருக்க வேண்டுமென்ற கருத்தைச் சான்றோர் போற்றி வந்தார்கள் என்று தெரிகிறது.

மற்றொரு கருத்தைச் சொல்கிறேன், படி.

> ''வினையே ஆடவர்
> உயிரே; வாள் நுதல்
> மனை உறை மகளிர்க்கு
> ஆடவர் உயிர்''
>
> (குறுந்தொகை: 135)

இந்த அடிகளில், ''முயற்சியே ஆடவர்க்கு உயிர்'' என ''மனையில் வாழும் ஒளி பொருந்திய நெற்றியை யுடைய மகளிர்க்கு ஆடவரே உயிர்'' என்றும் அந்தக் காலத்தில் கருதப்பட்டதாகத் தெரிகிறது. அப்படியானால் ''ஆண் உயிர்; பெண் உடம்பு'' என்பது சங்க காலத் தமிழரின் கண்ணோட்டம் என்று தெரிகிறது.

பிறிதொரு கருத்தைப் பார்:

> ''பூத்த கரும்பின்
> காய்த்த நெல்லின்
> கழனியூரன்''
>
> (ஐங்குறுநூறு: 4)

தோழியின் வாயில் வைத்துத் தலைவனிடம் ஒரு குறிப்புக் கூறப்படுகிறது இந்த அடிகளில். அது என்ன?

கரும்பு பூக்கும், காய்க்காது. ஆகவே இங்கு மகப்பேற் றிற்கு உரியவரல்லாத பரத்தையரைக் குறிக்கிறது.

'காய்த்த நெல்' இங்கு மகப் பேற்றுக்கும் உரியவளான தலைவியைக் குறிக்கிறது.

ஆசிரியர் இவ்வாறு ''பூத்த ''கரும்பு'' 'காய்த்த நெல்'' என்று கூறுவதன் வழியாக, அந்தக் காலத்தில், தலைவியர்களோடு பரத்தையர்களும் சமுதாயத்தில் இருந்தார்கள் என்பதைக் குறிப்பிடுகிறார்.

அன்பே! இன்று இங்கு அவசர அவசரமாக முடிக்கிறேன்.

அடுத்த கடிதத்திலிருந்து இரண்டு, மூன்று கடிதங்களாவது சங்க இலக்கியத்தின் பெண்கள் பற்றிய கண்ணோட்டத்தை உனக்கு எழுத வேண்டியிருக்கும்.

## கடிதம் 8

அன்பு மிக்க......

உடற்கூற்றுத் தத்துவப்படி பார்த்தால் மனிதன் நடமாடக்கூடிய ஒரு மரம் என்று ஒரு அறிஞர் கூறினார். இந்தத் தத்துவக் கண்ணோட்டத்தோடு, உடம்பை ஒட்டிய உண்மைகளை நுணுக்கமாக அலசிப் பார்த்தால், வேறொரு உண்மையும் புலப்படும். அது என்ன?

மனிதன் மற்ற மனிதர்களின் கூட்டுறவு இன்றித் தனித்து வாழ முடியாது. எப்படிப் பவழமானது கடற்பாறையினின்று தனித்திராதோ, எப்படித் தேனீயானது தனது கூட்டத்தினின்று பிரிந்திராதோ அதேபோல் மனிதனும், மனிதர்களிடமிருந்து பிரிந்திருக்க முடியாது.

இதனால்தான் கிரேக்கத் தத்துவ ஞானிகளில் கடல் போன்ற பெரும் பேரறிவுடையவனும், மகா அலெக்சாந்தரின் குருநாதனும் ஆகிய அரிஸ்டாட்டில், ''மனிதன் சமுதாயப் பிராணி'' என்று கூறி இருக்கிறான். இந்த

உண்மையை நீ மனதில் பதிய வைத்துக் கொள்வாய் என்பதில் ஐயமில்லை.

அன்பே! மனிதன் ஒரு தொகுதியிலுள்ள பகுதி. மனித னும் அவனால் ஆக்கப்படுகிற சமுதாயமும் தத்தம் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண இடையறாது முயல் கிறார்கள். தீர்வு கண்டு வாழ்க்கையைச் சமன் நிலைப் படுத்திச் செல்லும் பொருட்டு நடைபெறுகிற இந்த முயற்சி கள்தான் மானிட வரலாற்றில் பல போராட்டங்களாகவும் கூட்டு நடவடிக்கைகளாகவும் பரிணமிக்கின்றன.

இந்த உண்மையை நெஞ்சில் ஊன்றி, நீ சங்க இலக்கி யங்களைப் படிக்க வேண்டும்; அந்த இலக்கியங்களில் படம் பிடிக்கப்பட்டுள்ள அகப்புறச் சித்திரங்களை நீ மதிப் பிட வேண்டும்; பெண்ணைப் பற்றிய கண்ணோட் டத்தைக் கணித்தறிய வேண்டும்.

சென்ற கடிதத்தை முடிக்கும் முன், நான் உனக்கு "ஐங்குறுநூறு" என்ற அழகிய நூலிலிருந்து ஒரு பாட்டின் இரண்டொரு அடிகளை எடுத்துக் காட்டியிருந்தேன். அந்த அடிகளில் வரும் "பூத்த கரும்பையும்" "காய்த்த நெல்லையும்" சுட்டிக்காட்டிப் பண்டையத் தமிழ்ச் சமுதாயத்திலும் குல மகளும் விலை மகளும் வாழ்ந்தார்கள் என்று எடுத்துக் காட்டி இருந்தேன். நினைவு வருகிறதா?

நினைவு வருகிறதா என்றா கேட்கிறேன்? சரி, சரி எனது வாழ்நாளில் அறிவு வந்த பிறகு நான் சந்தித்த லட்சோப லட்சம் ஆண்-பெண்களில் உன்னைப் போன்ற நினைவுத் திறன் படைத்தவர்கள் எனது இரண்டு கை விரல்களுக்குள் அடங்கி விடுவார்களே, அத்துணை அற் புதமான நினைவு ஆற்றல் படைத்த நீ எனது சென்ற கடிதத்தில் நான் தூவியிருந்த கருத்துக்களையோ, மேற் கோள் காட்டிய பாடல்களையோ எவ்வாறு மறந்துவிட முடியும்? ஒருநாளும் முடியாது.

இந்தக் கடிதத்தில் அதே ஐங்குறுநூற்றிலிருந்து வேறு சில பாடல்களின் சில அடிகளை எடுத்துக் காட்ட விரும்புகிறேன்.

இந்த ஐங்குறுநூறு, நூறு நூறு பாடல்களாக ஐந்து, பகுதிகளையுடையது. ஐந்து பகுதிகளும் முறையே மருதம் நெய்தல், குறிஞ்சி, பாலை, முல்லை ஆகிய ஐந்து திணைகளையும் பற்றிப் பாடுகின்றன. எனவே இந்நூல், தமிழகத்தில் அன்று வாழ்ந்த பல்வேறு திணை மக்கள், அவர்களுடைய பண்பாடு ஆகியவற்றைப் பற்றி மிக நயம்படச் சித்திரித்துக் காட்டுகிறது.

ஒவ்வொரு குடும்பமும் வறுமையற்றுச் செழுமையில் புரள வேண்டும். தேவைப் பொருள்களும் இன்பப் பொருள்களும் தங்கு தடையின்றிக் கிடைக்க வேண்டும். இல்லற வாழ்வில் எல்லோருக்கும் இன்பம் துள்ளி விளையாட வேண்டும்—இதுதான் அக்காலத்துத் தமிழ் மக்களின் இதய ஒலி என்று தெரிகிறது.

எனவே, நாட்டில் விளைபொருள் மல்கிப் பெருக வேண்டும் என்பதும், பால் வளம் பெருக, கன்று காளைகள் வளம் பெருக வேண்டும் என்பதும், மக்கள் பசியின்றிப் பிணியின்றி மகிழ்ச்சிக் கடல் ஆட வேண்டும் என்பதும், பண்டைத் தமிழ் மக்களின் நல் விருப்பங்களாய் விளங்கின.

இந்தக் கருத்தை அருமையாக விளக்கும் சில பாடல்களின் சில அடிகளைக் கேள், ஒரு அடி இதோ:

**நெற் பொலிக; பொன்**
**பெரிது சிறக்க**
**எனவேட்டோளே யாயே**

(பாட்டு 1)

''நெல் முதலிய விளைபொருள்கள் பெருகிப் பொலிக என்றும், பொன்னும் மணியும் நிறைக என்றும் எனது தலைவி விரும்பினாள்.''

இன்னொரு அடியைக் கேள்:

விளைக வயலே; வருக
இரவலர்
எனவேட்டோளே யாயே

(பாடல் 2)

"வயல்களில் தானியங்கள் நன்றாக விளையட்டும்; இல்லாதவர்கள் உதவி வேண்டி ஏராளமாக வரட்டும் என்று எமது தலைவி விரும்பினாள்."

வேறொரு அடியைக் கேள்:

பால்பல ஊறுக; பகடு
பல சிறக்க
எனவேட்டோளே யாயே

(பாட்டு 3)

"பால் தரும் பசுக்களெல்லாம் நிறையப் பாலைப் பொழியட்டும்; உழவுக்கேற்ற காளைகள் பலவாகப் பெருகட்டும் என்று எமது தலைவி விரும்பினாள்"

பிறிதொரு அடியைக் கேள்:

பசியில்லாகுக; பிணி
சேண் நீங்குக:
எனவேட்டோளே யாயே

(பாட்டு 5)

"பசியின்றி எல்லோரும் வாழட்டும்; மக்களை வருத்தும் நோய்கள் சென்ற திசை தெரியாது ஒழியட்டும் என்று தலைவி விரும்பினாள்."

மற்றொரு அடியைக் கேள்:

மாரி வாய்க்க வளம்
பல சிறக்க;
எனவேட்டோளே யாயே

(பாட்டு 10)

"தட்டாது மழை பெய்யட்டும்; அதனால் பற்பல வளங்களும் சிறந்தோங்கட்டும் என்று எமது தலைவி விரும்பினாள்."

அன்பே! இந்த அடிகளைப் படித்ததும் உனக்கு ஏற்படும் எதிரொலி என்ன? இதிலிருந்து பண்டைத் தமிழ்ப் பெண்ணின் தன்மை-தரம் ஏதாவது உனக்குப் புலனாகிறதா? அன்று பெண்ணின் இடம் சமுதாயத்தில் எதுவாயிருந்தது? குறிப்பாக ஒரு இல்லக் கிழத்தியின் அல்லது குடும்பத் தலைவியின் இடம் எதுவாயிருந்தது என்பதுனக்கு விளங்குகிறதா? அன்று ஒரு இல்லக் கிழத்தியின் மனங் கவர் ஆசை என்ன என்பதை இந்தச் சங்க காலப் பாட்டுகள் தெரிவிக்கின்றனவா?

"நான் செல்வமும் செழிப்புமுள்ள ஓர் நல்ல குடும்பத்தில் வாழ்க்கைப்பட வேண்டும். இறைக்க இறைக்க ஊறுகிற இன்பம் மிக்க இல்லற வாழ்க்கை எனக்கு வேண்டும்." இது அந்த நாள் பெண்ணின் ஆசைக் கனவாக இருந்தது என்று தெரிகிறது. மேலே காட்டிய ஐங்குறுநூற்றுப் பாடல்களின் அடிகள் இதைத்தானே எடுத்துக் காட்டுகின்றன?

குடும்பத் தலைவி இன்ப வாழ்வை விரும்புகிறாள், அதற்காக தனது குடும்பம் முழுதும் இன்பச் சூழலில் மிதக்க வேண்டும் என்று விரும்புகிறாள். அதற்காகத் தனது சமுதாயமே இன்பக் கடலில் கப்பல் விடவேண்டும் என்று விரும்புகிறாள்.

தானிய தவசங்களும், பொன்னும் மணியும், பாலும் தேனும் சமுதாய வாழ்வில் பெருகவேண்டும் என்றும் மழை வளமும் அதன்வழிப் பல வளமும் சிறக்க வேண்டும் என்றும் வறுமையும் பிணியும் மண்ணோடு மண்ணாக வேண்டும் என்றும் ஒரு குடும்பத் தலைவி விரும்புகிறாள்.

அப்படியானால், அன்பே! அந்த நாளில் தன்னுடைய வாழ்வில் சமுதாய வாழ்வைப் பார்க்கிற, அல்ல, தன்னுடைய வாழ்வுக்கும் சமுதாய வாழ்வுக்கும் உள்ள சரியான இணைப்பைப் பார்க்கிற கண்ணோட்டம் அந்தக் காலத்தில் பெண்களுக்கு இருந்தது என்று இந்த ''ஐங்குறு நூற்'றுச் சித்திரம் காட்டுகிறதல்லவா?

இத்தனை தூரம் ஒரு குடும்பத் தலைவியின் நோக்கம் உயர் நோக்கமாக இருக்க வேண்டுமானால், அந்தப் பெண்ணணங்குக்கு எத்தனை தூரம் சுதந்திரமும் உரிமையும் சமுதாயத்தில் இருந்திருக்க வேண்டும் என்று, புதுமைப் பெண்ணான உன்னால் ஊகிக்க முடிகிறதா? இந்தக் கேள்விக்கு நீ கட்டாயம் உனது அடுத்த கடிதத்தில் பதில் அளிக்க வேண்டும். ஏன் வற்புறுத்துகிறேன், தெரியுமா?

முன்பெல்லாம் நான் கடிதம் எழுதினால், எனது கடிதம் உனக்கு கிடைத்தது முந்தியா, அதை நீ படித்தது முந்தியா, பதில் விடுத்தது முந்தியா என்று குழப்பமடையத் தக்க விதத்தில், உனது பதில் பறந்து ஓடிவரும். இப்பொழுது அந்த நிலைமை அடியோடு மாறிப்போன ஒரு புதிய நிலைமை ஏற்பட்டு விட்டது போலத் தோன்றுகிறது.

எனது கடிதங்கள் சுமந்துவரும் தொடர் பொருள்களில் நீ ஆழ்ந்து விடுவதால், நிதானமாக அவசரப்படாமல் பதில் தீட்டவேண்டும் என்று நினைக்கிறாய் போலிருக்கிறது.

''தேவ தூதர்கள் காலடி எடுத்துவைக்க அஞ்சும் இடங்களில் மூடர்கள் தலைதெறிக்கப் பாய்வார்கள்'' (Foolsrush in Where Angels fears to trend) என்று நீ அடிக்கடி என்னிடம் சொல்லும் ஆங்கிலக் கவிஞரின் அறிவுரையை நினைத்து, அதனால் அனாவசியமாகத் தயக்கம் அடைகிறாயோ, என்னவோ பதில் எழுத?

அன்பே! உனது பதிலுக்காக வழி மேல் விழிவைத்து நிற்கிறேன்.

## கடிதம் 9

அன்பு மிக்க......

சென்ற மாதம் 25-ம் தேதி முற்பகல், சோழிங்கருக்கும் தணுங்கைக்கும் இடையில் புகைவண்டி காட்பாடியை நோக்கிக் கன ஜோராக ஓடிக் கொண்டிருந்தது. அரைத் தூக்கத்தில் ஒரு மங்கலான கனவில் குழம்பிக் கிடந்த நான் திடீரென்று விழித்துக் கொண்டேன்.

வண்டியிலிருந்து வெளியே பார்த்தேன். பின்னால் வெகு தூரத்தில் சோழிங்கர் ரயில்வே நிலையம் தெரிந்தது. சோழிங்கரைச் சொந்த ஊராகக் கொண்ட, சிறிது காலத்திற்கு முன் எனக்கு அறிமுகமான ஒரு தங்கையின் நினைவு எனக்கு ஏற்பட்டது. மறுகணத்தில் உன்னை நினைத்தேன்.

அண்மையில் நீ எனக்குத் தீட்டிய அன்புக் கடிதம் என் நினைவில் குமிழி வீட்டது. அந்த மடலில் எதிரொலிக்கும் உனது பண்பையும் சுவையையும் சிந்தித்தேன்.

புதுமைப் பெண்ணான நீ ஏற்கனவே சென்ற பாதையிலிருந்து தடம் மாறி, இன்னொரு புதுமைப் பெண்ணாக உருவாகி வருகிறாயோ என்ற ஒரு அரைகுறை ஐய வினா என் மனதில் எப்படியோ முளைத்துப் பதில் பெற ஊசலாடத் தொடங்கிற்று.

உனது அன்பு கெழுமிய வேண்டுகோள் தூண்டியதால் தான் நான் இந்தப் 'புதுமைப் பெண்' கடிதங்களை எழுதி வருகிறேன். அன்று, இந்தச் 'சிக்கல் முக்கலான' பணியில் என்னை இழுத்துவிடும் பொருட்டுச் சரமாரியாகக்

கேள்வி மாரியைப் பொழிந்து என்னைத் திக்குமுக்காட வைத்தாய்; எனது உணர்ச்சி வேகத்தைத் தட்டி எழுப்பினாய்; பின்னர், இடைக்கிடை சுவைபடச் சில கேள்விகளைத் திறம்படக் கேட்டு, எனது கருத்தோட்டத்தைக் கிளறி விட்டாய்; இன்று நான் இந்தக் கடிதம் எழுதுவதை நிறுத்திவிட விரும்பினாலும், என் மனம் விரும்பாத ஒரு சூழ்நிலையை உருவாக்கி விட்டாய். இது இருக்கட்டும்.

பொதுக்கூட்டத்தில் பேசத் தொடங்கினால், குற்றாலம் நீர் வீழ்ச்சி மாதிரிப் பொழிவாய். உனக்கு வேண்டியவர்களிடம் ஒரு செய்தியை அல்லது ஓர் உண்மையைத் தெரிந்துகொள்ள விரும்பினால், வினாக்களை அடுக்கடுக்காக மூச்சுவிடாமல் போட்டு, துளைத்து எடுத்து விடுவாய். பெரியவர்கள் உரையாடிக் கொண்டிருந்தால் பேசாமடந்தை போல் வாய் திறவாமல் அடக்க ஒடுக்கமாக இருப்பாய். உன்னை ஒட்டிய பிரச்சினை ஏதேனும் கிளப்பப்பட்டால், ஒரு சிறந்த வீரன் வாளையும் கேடயத்தையும் திறம்படக் கையாளுவதைப் போன்று, கேள்விகளையும் பதில்களையும் அள்ளி அள்ளி வீசுவாய்.

உனது குணாதிசயங்களை நன்கு தெரிந்தவன் என்று நான் ஜம்பம் அடித்துக் கொண்டிருந்தேன். ஆனால் அண்மையில் நீ உனது வழக்கமான போக்குக்கு மாறாக நிதானம் காட்டி வருவதைப் பார்த்தால், உனது குணாதிசயம் என்னால் புரிந்து கொள்ள முடியாத புதிர் என்றே உணர்கிறேன்.

இனி நான் தொடர்ந்து விளக்கி வரும் பொருளுக்கு வருகிறேன்.

சங்க இலக்கியத்தைப் பற்றிய எனது வரையறுப்புகளில் சிற்சிலவற்றை முன்னர் எழுதியுள்ளேன். இன்னும் சில பல வரையறுப்புகளை உனக்குக் கூற விரும்புகிறேன். இவை

உனது கவனத்தில் தங்கும் பொழுது, சங்க காலப் பெண்களைப் பற்றிய கண்ணோட்டத்தில் இன்னும் தெளிவு ஏற்படும்.

அன்பே! சங்க காலக் கவிதைகள் - அவற்றுள்ளும் முற்சங்க காலக் கவிதைகள் - உலகியல் வாழ்வைப் பற்றியும் தனி ஆட்களைப் பற்றியுமே பாடுகின்றன.

இந்தப் பாடல்கள், முழுக்க முழுக்கவோ, மிகப் பெரும்பாலாகவோ, அரசர்களையோ, சிற்றரசர்களையோ பற்றிப் பாடுகிறவைகள் அல்ல. சாதாரண மக்களின் சாதாரண வாழ்க்கையைப் பற்றியும் அவர்களுடைய ஆசாபாசங்களைப் பற்றியும் உணர்ச்சிச் சித்திரங்களைப் பற்றியும் பாடுகின்றன. மலைநாட்டு வேடர்களைப் பற்றியும், புல்வெளிகளில் ஆடு-மாடு மேய்த்துத் திரியும் ஆயர்களைப் பற்றியும், கடலரசர்களான மீனவர்களைப் பற்றியும், ஐவகை நிலங்களில் வாழும் இளங்காதலர்களைப் பற்றியும் பாடுகின்றன. வேந்தர்களின் விறல் வீரத்தைப் பற்றியும், வள்ளல்களின் தனக்கென வாழாத் தன்மையைப் பற்றியும், தாய்மார்களின் நாட்டன்பைப் பற்றியும், அரண்மனைகள் - நகரங்கள் பற்றியும், ஏழைகள் - இழிந்தவர்கள் பற்றியும் இன்னபிற அன்றைய வாழ்க்கையின் பல்வேறு குணச் சித்திரங்கள் பற்றியும் பாடுகின்றன.

பல்வேறு கோணங்களிலிருந்து நீ சங்ககாலப் பெண்ணின் கண்ணோட்டத்தைக் காணவேண்டுமென்பது எனது பேரவா. இந்தக் கடிதத்தில் சங்ககாலப் பெண்ணின் நிலைமையை - அவள் கண்ணோட்டத்தை-இரண்டு இடங்களில் வைத்து, இரண்டு சித்திரங்கள் வழி உனக்குக் காட்டப் போகிறேன்.

முதலில் ''குறுந்தொகை'' என்ற சங்க நூலிலிருந்து ஒரு சித்திரத்தைத் தீட்டுகிறேன்.

அன்றைய சமுதாயம் எப்படியிருந்தது? அங்கு ஆணுக்கும் பெண்ணுக்கும் இருந்த உரிமை எப்படி? இளங் காதலர்கள் எப்படி ஜோடி சேர்ந்தார்கள் என்பவற்றை நமக்கு இந்த வாழ்க்கைச் சித்திரம் மிக அழகாகப் படம் பிடித்துக் காட்டுகிறது.

சித்திரம் இதோ:

இளமை எழில்மிக்க இருவர். ஒருவர் ஆண்; ஒருவர் பெண். இருவரும் முன்பின் அறியாதவர்கள்.

தற்செயலாகச் சந்தித்தார்கள். இரு உள்ளங்களும் நெகிழ்ந்தன.

உள்ள நெகிழ்ச்சிக்கு, இன்ன இடத்தில், இன்ன காலத்தில், இன்னாரிடம்தான் தோன்றவேண்டும் என்ற நியதி கிடையாது. அந்த நெகிழ்ச்சிக்கு உரியவர் யாரோ அவர் எதிர்ப்படும்போது, அது தானே தோன்றி அமையும். அதன் முன் எந்த வேறுபாடு—மாறுபாடும் எதிர்நிற்க முடியாது. வெள்ளம் போல் பெருக்கெடுத்துப் பாய்ந்து இரண்டறக் கலக்கும்.

மேற்கூறிய இருவர் உள்ளங்களும் நெகிழ்ந்து கலந்தன. இருவரும் ஒருவராயினர்.

தலைவன் தலைவியைப் பார்த்தான்; தலைவி தலைவனைப் பார்த்தாள். இருவர் கண்களிலும் இருவர் கண்களும் மாறி மாறிப் புகுந்தன. எட்டு இதழ்கள் நான்கு கண்களை மூடின. சிறிது நேரம் இன்பப் பேரமைதி.

தலைவர் என்றேனும் தன்னைப் பிரிந்து விடுவாரோ என்று தலைவிக்கு ஒரு எண்ணம் பிறந்தது. தலைவி கண்களைத் திறந்தாள். விழிகள் ஐயத்தை வெளியிட்டன. கண்களைத் திறந்த தலைவன் அதனைக் குறிப்பால் தெரிந்து கொண்டான். சந்தேகத்தை நீக்க நினைத்தான்.

தலைவன் மெய்யான உணர்ச்சிப் பெருக்கோடு தலைவியிடம் சொன்னான்.

''இதற்கு முன் என் தாயும் உன் தாயும் எத்தகைய தொடர்பேனும் உடையவர்களா? என் தந்தையும் உன் தந்தையும் எந்த முறையில் உறவினர்கள்? நானும் நீயும் ஒருவரை ஒருவர் எப்படி அறிந்து கொண்டோம்? செம்மண் நிலத்தில் பெய்த மழை நீர்போல அன்புடைய நெஞ்சங்கள் தாமாக இயற்கையாகக் கலந்தன'' என்று.

பாடல் இதோ:

''யாயும் ஞாயும்
யாராகியரோ?
எந்தையும் நுந்தையும்
எம்முறைக் கேளிர்?
யானும் நீயும்
எவ்வழி அறிதும்?
செம்புலப் பெயல் நீர் போல
அன்புடை நெஞ்சம்
தாம் கலந்தனவே''

(குறுந்தொகை: 40)

அன்பே! சங்க காலச் சான்றோனான கவிஞன் ''சமுதாய அனுபவத்தையும் இயற்கை அனுபவத்தையும் குழைத்து, காதலர் நெஞ்சம் ஒட்டும் அற்புதத்தைக் காட்டும் அற்புதத்தை நான் ஆயிரம் தடவை சுவைத்து உணர்ந்திருக்கிறேன்.

கவிஞன் என்ன சொல்கிறான்?

செம்மண் நிலத்தில் மழை நீர் பெய்தால், அந்த நீரில் மண்ணின் நிறமும் சுவையும் ஊறும். அந்த மண்ணின் தன்மையை மழை நீர் அடையும். அது போல் அன்புள்ள நெஞ்சம் இரண்டும் ஒன்றையொன்று கலந்து ஒரு தன்மையாகி விடும், என்று கூறுகிறான்.

இதன் பொருள் என்ன?

மழை வேறாகவும் மண் வேறாகவும் தனித் தனியாக இருக்கும்பொழுது உலகத்தில் எவ்வகையான வாழ்க்கையும் இல்லை. அது மாதிரி ஆண், பெண் உள்ளங்கள் தனித் தனியாய் நிற்கும்போதும் உலகத்தில் வாழ்க்கை என்பது ஒன்றும் இல்லை. இயற்கை ஆணையும் பெண்ணையும் தனித் தனியாக இருக்க விடுவதில்லை.

எனவே, இயற்கை நிகழ்ச்சியின்படி உள்ள நெகிழ்ச்சி யோடு ஆணும் பெண்ணும் ஒன்று கூடுவதே பிசகற்றது; வலிவு ஊட்டுவது; தளர்ச்சியற்றது; உறுபயன் தருவது.

இது பண்டையத் தமிழ்ச் சமுதாய வாழ்வில், நடை முறையில் மேலோங்கி நின்ற ஒரு கருத்தோட்டம் என்று தெரிகிறது.

இந்தக் 'குறுந்தொகை'ப் பாடலில் கூட்டு வாழ்வைப் பற்றிய கண்ணோட்டமும், பெண்ணைப் பற்றிய கண் ணோட்டமும் பொதிந்து கிடக்கின்றன என்று நான் கருதுகிறேன். உனது எதிரொலி என்னவோ?

இனி இரண்டாவது சித்திரத்தை உனக்குக் காட்ட விரும்புகிறேன்.

இந்தச் சித்திரத்தில் இல்லற வாழ்க்கையின் இன்பம் எடுத்துக் காட்டப்படுகிறது. இதில் கணவனும் மனை வியும் குடும்ப வாழ்க்கையின் இன்பத்தை எப்படி அனுப விக்கிறார்கள் என்பதைக் கவிஞன் அருமையாகப் படம் பிடித்துக் காட்டுகிறான்.

சித்திரத்தைக் கண் குளிரக் காண உனது ஆவல் துடிதுடிக்கிறது அல்லவா? இப்பொழுது நான் காட்டப் போகிற சித்திரமும் "குறுந்தொகை" நூலில் உள்ள சித்திரமே. இதோ சித்திரத்தைப் பார்!

மணவினை முடிந்து விட்டது. தலைவி கணவன் வீட்டுக்கு வந்து விட்டாள். கணவன் வீடு பெரிய மாளிகை. குடும்பம் செல்வம் நிறைந்தது. எடுக்கப் பத்து ஆள், பிடிக்கப் பத்து ஆள் அந்த மாளிகையில் உண்டு. ஆயினும் தலைவன் மேலுள்ள அன்புப் பெருக்கினால், அவள் தானே சமைத்து வந்தாள்.

ஒரு நாள், தயிரைப் பிசைந்தாள் ஏன்? சற்று புளிச் சுவையுள்ள நல்ல தயிர்க் குழம்பு கணவனுக்குச் செய்து கொடுக்க வேண்டுமென்று விருப்பம் அவளுக்கு.

இவள் விரல்களோ காந்தள் மலர் போன்ற மெல்லிய விரல்கள். தயிரோ நன்றாகக் காய்ச்சிய பாலில் பிரை சேர்த்ததாதலின் முற்றிப் பாழை பட்ட கெட்டித் தயிர். எனவே விரல்கள் நோவ அதனைப் பிசைந்தாள். அப்படிப் பிசைந்த தயிரை அடுப்பில் ஏற்றிப் பாகம் செய்தாள்.

இடுப்பில் மாசு மருவற்ற நல்ல தூய ஆடை புனைந் திருந்தாள். சமையல் செய்யும் 'ஜோரில்' அந்த ஆடை இடுப்பிலிருந்து நெகிழ்ந்தது. விரல்களைக் கழுவிக் கொள்ளாமலேயே நெகிழ்ந்த ஆடையைச் சீராக உடுத்துக் கொண்டாள்.

உனக்குத்தான் தெரியுமே, தாளிதம் செய்யும்போது கண் கொட்டாமல் துழாவிக் கொண்டிருக்க வேண்டும். அக்கம் பக்கம் திரும்பினால் பாகம் கெட்டுவிடும்.

எனவே அந்தத் தலைவி, பாகம் கெடாதிருக்க, குழம்பையே பார்த்துத் துழாவிக் கொண்டிருந்தாள். அவள் கண்களோ குவளை மலர் போன்றவை; குளிர்சியானவை. தாளிப்பின் புகை அந்தக் கண்களில் பட்டுப் பரந்தது......

இப்படியெல்லாம் துன்பத்தைச் சட்டை செய்யாமல் துழாவிச் சமைத்த புளிக் குழம்பை அவள் கணவன் மிக இனிமையாக இருக்கிறதென்று சுவைத்து உண்டான்.

சுவைப்பான், அவளைப் பார்ப்பான்; சுவைப்பான்; நன்கு சுவைப்பான்; அவளைப் பார்ப்பான்;—இவ்வாறு மலர்ச்சியோடும் அக மகிழ்ச்சியோடும் உண்டு கொண்டிருந்தான்.

தன் திறமையை வாயார வியந்து கொண்டே கணவன் உண்ணுவதை நோக்கி, தலைவி மிக நாணங் கொண்டாள். தன் ஒளி பொருந்திய நெற்றிக் கண் முன்னோக்கி வர முகம் கவிழ்ந்து கொண்டு, ஒரு பக்கம் ஒதுங்கி நின்றாள். அவள் முகம் மலர்ச்சியால் நிறைவு அடைந்து விளங்கிற்று.

இந்தச் சித்திரத்தை விளக்கும் பாடல் இதோ:

''முளிதயிர் பிசைந்த
காந்தள் மெல்விரலால்
கழுவுறு கலிங்கம்
கழாஅது உடிஇக்
குவளை உண்கண்
குய்ப்புகை கமழத்
தான் துழந்து அட்ட
தீம்புளிப் பாகர்
இனிதெனக் கணவன்
உண்டலின்,
நுண்ணிதின் மகிழ்ந்தன்று
ஒண்ணுதல் முகனே'

(குறுந்தொகை :167)

(முளிதயிர்-முற்றிய தயிர், கலிங்கம்-ஆடை, கழாஅது-கழுவாமல், உடிஇ-உடுத்து, உண்கண்-கவர்ச்சியான கண், குய்-தாளிதம், துழந்து-துழாவி, அட்ட-சமைதத தீ-இனிய பாகர்-பாகம்.)

மனைவி மேற்கூறியபடி எல்லாம் மகிழ்ச்சியில் விளையாடி அந்தக் குடும்பத்தில் அவள் கடல்மடை திறந்து விட்டதைச் சொல்லத் தேவை இல்லை.

நெஞ்சு ஒட்ட ஒட்ட அதில் ஆணும் பெண்ணும் இன்பமாய், குடும்பத்தில் மனைவி மக்களாய்ப் பொறுப்பு ஏற்றல்—இரு முத்துக்கள் பொதிந்த பதக்கம் போன்ற வாழ்க்கைக் கண்ணோட்டத்தை நீ ஆழ்ந்து சிந்தித்துப் பார்க்கவேண்டும். அன்றைய பெண் பற்றிய கண்ணோட்டம் விளங்கும்.

அடுத்த கடிதத்தில், அன்பே! வேறு சில கோணங்களைக் காட்டுவேன்.

## கடிதம் 10

அன்பு மிக்க......

ஒருவன் காஞ்சிபுரத்தில் போய்க் குனிய வேண்டும் என்று வைத்துக்கொள். அதற்காக அவன் கன்னியா குமரியிலிருந்தே தலையைத் தாழ்த்திக்கொண்டே போக வேண்டுமா! 'வேண்டாம்' என்று 'பளிச்'சென்று பதில் சொல்வாய்.

ஆனால், உனது தோழியின் பிரதிபலிப்பு என்று நீ சென்ற கடிதத்தில் தீட்டியிருந்தாயல்லவா? அது என்னைக் கன்னியாகுமரியிலிருந்தே தலையைத் தாழ்த்தும்படி கோருகிறது. புரிகிறதா உனக்கு? விளக்குகிறேன், கேள்.

நான், எனது கடிதங்களை எவ்வாறு எழுதப் போகிறேன் என்பதைப் பிள்ளையார் சுழி போட்ட பொழுதே உனக்கு விளக்கியுள்ளேன். அதை நீ மறந்திருக்க மாட்டாய். உனது தோழி அந்த முதல் கடிதத்தைப் படிக்க நேர்ந்ததோ என்னவோ! படித்திருந்தால் நான் குறிப்பிட்டிருந்த 'எனது முறையை' மறந்து விட்டாள் போலிருக்கிறது. நீ அவளுக்கு அதை நினைப்பு ஊட்டு. அவள் அந்த முதல் கடிதத்கைப் படித்திராவிட்டால், அன்பு

கூர்ந்து அதை அவளிடம் உடனே கொடுத்துப் படிக்கச் சொல்.

செய்தி என்ன தெரியுமா? நான் அந்த முதல் கடிதத்தில், எழுதி வருகிற—எழுதப் போகிற பற்பல கடிதங்களையும் எப்படி எப்படி எழுதப் போகிறேன் என்று தெளிவாகக் குறிப்பிட்டிருந்தேன். பெண்கள் பற்றிய கண்ணோட்டம் நெடுகிலும் இலக்கியத்தில் எப்படிப் பேசப் படுகிறதென்று எழுதுவேன்; பின் நாட்டு நடப்பில் எப்படிப் பேசப்பட்டது, பேசப்படுகிறது என்று எழுதுவேன் எனக் குறிப்பிட்டிருந்தேன். இதை மறந்த தவறோ என்னவோ, உனது தோழி உடனுக்குடன் நான் எனது நிர்ணயிப்பைக் கூறிவிட வேண்டுமென்று அவசரப்படுகிறாள்.

உனது பிரதிபலிப்பை நீ எப்பொழுதும் சொல்லலாம்; உனது பிரதிபலிப்பை நான் அறிய அறிய உனக்கு நன்றாகச் சொல்வதில் என் கடிதம் இன்னும் செழுமைப்படும் என்பதில் ஐயமில்லை. ஆனால் எனது எதிரொலியைக் கடிதத்திற்குக் கடிதம் நீயோ உனது தோழிகளோ கோருவது சரியல்ல. நான் ஏற்கனவே ஒரு அரங்கு வரைந்து, அதில் நின்றுகொண்டு ஆடுகிறேன். எந்த உண்மையை எந்தப் பொழுது சொல்ல வேண்டும்; பொருளை படிப்படியாக, எவ்வாறு முன்னோக்கிச் செல்ல வேண்டும் என்று ஒரு திட்டமிட்டுத் தான் கடிதங்கள் எழுதி வருகிறேன் என்பது உனக்குத் தெரியும். எனவே எனது எதிரொலி வெளிப்பட வேண்டிய பொழுது வெளிப்படும்.

ஆகவே, அன்பே! 'அவசரப்படேல்' என்று நான் உனக்கு எழுதும் கடிதங்களைப் படிக்கும் உனது தோழிகளுக்குச் சொல். விடிய விடிய வெளிச்சம் என்று ஒரு கடிதத்தில் எழுதியிருக்கிறேன் அல்லவா? அதுபோல் போகப் போக உண்மை புலனாகும்.

மேலும், இரண்டு செய்திகளை உனது கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். ஒன்று, இந்தக் கடிதங்களில்

வரும் இலக்கிய ஆராய்ச்சியைப் பற்றியது. மற்றொன்று, நான் இந்தக் கடிதங்களை எப்படி எழுதி வருகிறேன் என்பதைப் பற்றியது.

இரண்டாவது, நான் எப்படி எழுதி வருகிறேன் என்று கவனி: உதாரணமாக, சென்ற கடிதத்தை எழுதிய விதத்தை மாத்திரம் கூறுகிறேன். இந்த விஷயத்தில் ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்பது பொருந்தும்.

சென்ற மாதம் 25-ம் தேதி, சித்தூருக்குச் சென்ற பிரயாணத்தில் சோழிங்கர் முதல் காட்பாடிவரை ரயில் வண்டியில் 'புதுமைப் பெண்' கடிதத்தைப் பற்றிச் சிந்தித்தேன். 28-ம் தேதி காலையில் தேவிகுளம்-மூணாற்றில் எழுதத் தொடங்கினேன். 29-ம் தேதி, உடுமலைப் பேட்டையிலிருந்து திண்டுக்கல் செல்வதற்கு இடையில் வாய்ப்புக் கிடைத்த சிறிது நேரம், ரயில் வண்டியில் வைத்து எழுதினேன். 30-ம் தேதி காரைக்குடிக்கு வந்து, பல்வேறு காரியங்களுக்கு மத்தியில் அவசரக் கோலமாகக் கடிதத்தைத் தொடர்ந்து எழுதி முடித்துத் தபாலில் சேர்த்தேன். இப்படி, ஓடுகிற ஓட்டத்தில் எழுதுவதில், இலக்கியச் சரக்குக் கொண்ட கடிதம் எந்த அளவுக்கு எழுத முடியும் என்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். எனக்குள்ள வாய்ப்பு-வசதிகளைக் கணக்கில் எடுத்துக் கொண்டால், முழு மூச்சான, விரிவான, நுட்ப திட்பமான ஆராய்ச்சியை இந்தக் கடிதங்களில் எதிர்பார்க்க முடியாது.

சரி, இது இருக்கட்டும். இனிச் சென்ற கடிதத்தில் 'தொட்டகுறை விட்டகுறை'யைத் தொடர்கிறேன்.

அன்பே! புறநானூற்று சித்திரங்கள் சில பல தாய்மார்களின் தேச பக்தியையும் பெண்மணிகளின் வீரப் பண்பையும் பேரோவியமாகப் படம் தீட்டிக் காட்டுகின்றன:

''மீன் உண் கொக்கின்
தூவி அன்ன
வால நரைக் கூந்தல்
முதியோள்''

(புறம்: 277)

அதாவது, கொக்கின் சிறகு போல் வெள்ளைவெளே ரென்று நரைத்த கூந்தலையுடைய மறக்குலத்தைச் சார்ந்த, முதிர்ந்த தாய் ஒருத்தி தன் மகன் போர்க் களத்தில் வீர மரணம் அடைந்தான் என்று கேட்டதும் பெற்ற பெரிதினும் பெரு மகிழ்ச்சி அடைந்தாள் என்று புறநானூறு கூறுகிறது. மற்றொரு குடுகுடுக் கிழவி, தன் மகன் மார்பில் அம்பு தைத்துப் போர்க் களத்தில் இறந்து கிடப்பதைத் தான் நேரில் சென்று கண்ணாரக் கண்டு, பெற்ற காலத்தை விடப் பெருமகிழ்ச்சி கொண்டாள் என்று வேறொரு புறப்பாட்டுக் கூறுகிறது.

மறவர் குடியில் பிறந்த பிறிதொரு வீரத் தாய் சொல்கிறாள்:

''ஈன்று புறந்தருதல்
என் தலைக்கடனே''

(புறம்: 312)

என்று 'புதல்வனைப் பெற்றுப் பேணிக் காப்பது எனது கடமை' என்று கூறுவதோடு அவள் நிற்கவில்லை. சான்றோனாகப் பயிற்சி அளிப்பது தகப்பனின் கடமை என்று கூறுவதோடு அவள் நிற்கவில்லை. சான்றோனாகப் பயிற்சி அளிப்பது தகப்பனின் கடமை என்றும் படைக் கலங்களை வடித்துக் கொடுப்பது கொல்லனின் கடமை யென்றும் நல்லொழுக்கத்தை அளிப்பது அரசனின் கடமை

என்றும், போர்க்களத்தில் வெற்றி வீரனாக விளங்க வேண்டியது புதல்வனின் கடமை என்றும் கூறுகிறாள்.

இந்த முதிய தாயின் இந்தக் கருத்தோட்டத்தில் வீரம், நாட்டன்பு, உலகியல் அறிவு, கடமை உணர்ச்சி யாவும் வெட்ட வெளிச்சம் ஆகின்றன. இதோடு புற நானூற்றுப் புலவர்களில் சிலர்பலர் பெண்பாலார் என்பது குறிப்பிடத் தக்கது.

இவற்றிலிருந்து பெண்ணைப் பற்றிய கண்ணோட்டம் பெண்ணிடம் உருவாயிருந்த கண்ணோட்டம் ஓரளவு உனக்குப் புரியும் என்று கருதுகிறேன்.

வேறொரு கோணத்திலிருந்து வேறொரு பெண்ணின் மனச் சித்திரத்தைப் பார்!

ஒரு தலைவி தன் தோழியிடம் கூறுகிறாள்: "அறத் திலிருந்து பிறழ்ந்து விடாத நல்வாழ்க்கையும், என்றும் பிறர் கடைவாசலில் சென்று கையேந்தாத நல்வளமும் நமக்கு வேண்டும்." இந்நிலைமைகள் இரண்டும் செல் வத்தின் பயனாக விளைபவைகளாகும். இந்த உண் மையை நமக்கு விளக்கிச் சொல்லியவர் யார்? நம் தலைவர்.

"அவருடைய அறிவு, பொருள் திரட்ட நம்மைப் பிரியும்படி கூறிற்று. அவருடைய காதல், நம்மைப் பிரிய மறுத்தது. நமது தலைவர் இருதலைக்கொள்ளி எறும்பு போல் தவித்தார். நம்மைப் பிரிய மாட்டாத அருளினால் நமது நீண்ட, இருண்டடர்ந்த அழகிய கூந்தலை வெகு நேரம் தடவிக் கொடுத்துக் கொண்டிருந்தார்.

"பின்னர் கடமை உந்த, உயிரை இங்கே விட்டு விட்டு உடம்போடு மட்டும் சென்றார். அன்னார் பிரிவினால், நாம் துன்பத்தில் பெரிதும் வருந்துகிறோம் என்பது மெய். ஆயினும், அவர் தாம் சென்ற காரியத்தைச் செவ்வனே முடித்து வரட்டும் தோழி!" என்று.

இதோ பாடல்:

'அறன் கடமைப் படாஅ
வாழ்க்கையும் என்றும்
பிறன்கடைச் செலா அச்
செல்வமும் இரண்டும்
பொருளின் ஆகும்
புனையிழை'' என்று நம்
இருளேர் ஐம்பால்
நீவியோரே,
நோய்நாம் உழக்குவம்
ஆயினும் தாம்தம்
செய்வினை முடிக்க;
தோழி!

(அகம்: 155, 1-6)

தலைவியின் மேற்படிச் சொற்களில் எத்தனை பெருந் தன்மை; எத்தனை அன்பின் நினைவுதனைக் கடமை முனைப்பில் சுடர்விட்டு ஒளி வீசுவதைப் பார். இந்த அகப்புறப் பண்புகளின் தொகுக்கப் பெற்ற குடும்ப வாழ்க் கைச் சித்திரத்துக்கு ஒரு நல்ல எடுத்துக்காட்டு.

'அகநானூறு' சங்க கால இலக்கியங்களிலேயே மிகச் சிறந்ததொரு நூல். அகத்தைப்பற்றிக் கூறுவதில் தேர்ச்சி பெற்றது. இத்தகைய நூல் சங்கத் தமிழர் சமுதாயத்தில் நேர்மையின் குண வளத்தை மிக நேர்த்தியாக மேற்கண்ட வாறு படம் பிடித்துக் காட்டுகிறது. நிற்க.

அநேகமாக அடுத்த இரண்டொரு மடல்களில் சங்க இலக்கியக் கண்ணோட்டத்தின் சிகரமான 'திருக்குறள்' கண்ணோட்டத்திற்கு உன்னை அழைத்துச் சென்று விடுவேன்.

பின்னர், சிலப்பதிகாரம், சீவக சிந்தாமணி கம்பன் காவியம், இடைக்காலப் புலவர்கள், அப்பால் தமிழகத்தில் நிலப்பிரபுத்துவத்தில், சராசரித் தமிழனிடையில் பெண்கள் நிலை.

## கடிதம் 11

அன்பு மிக்க .....

ஒரு தோழி தன் தலைவியிடம் பின்வருமாறு சொன்னாள்:

அவன் ஆயர் மகனானால் நீயும் ஆயர் மகளானால் உன்னை அவன் விரும்பினான் ஆனால், அவனை நீயும் விரும்பினாயானால், உன் அன்னை நொந்து கொள்ளத் தக்கது ஒன்றும் இல்லை, என்று. இந்த அறிவுரையைக் கேட்ட தலைவி தோழியிடம் 'தோழி! உன் உள்ளமே எனது தாயின் உள்ளமாக இருந்தால் அவன் நொந்து கொள்ளத்தக்கது ஒன்றுமில்லை என்பது மெய்'' என்றாள்.

இனிப் பாட்டைக் கேள்!

> ''ஆயர் மகன் ஆயின்
> ஆயர்மகள் நீ ஆயின
> நின்வெய்யன் ஆயின்
> அவன் வெய்யை நீ ஆயின்
> நின்னை நோதக்கதோ
> இல்லை ம. நின் நெஞ்சம்
> அன்னை நெஞ்சு ஆகப்பெறின்''
>
> (கலித்தொகை: 107-20-23)

கற்றோர் போற்றும் 'கலித்தொகை' இங்கு ஓர் உண்மையை நயமாக உணர்த்துவதைக் கவனி!

ஒரு ஆண் மகன் ஏறு தழுவுதல் போன்ற ஒரு ஆண்மைச் செயலைச் செய்கிறான். அந்த ஆண்மையை ஒரு பெண் மகள் பார்க்கிறாள். அவள் பெண்மை உள்ளம், அவன் செயலின் பெருவலியில் தன்னைப் பறி கொடுத்து விடுகிறது. இருவரும் ஒருவரை விரும்பி ஒருவர் மனம் விழுந்து காதலிக்கிறார்கள். ஆதலின் திருமணம் தடைப் படாது என்கிறது கலித்தொகை. அதாவது பரஸ்பரம் ஆணும் பெண்ணும் விரும்பிய இணக்கமே, திருமணத்திற்கு முதன்மையாக வேண்டியது என்ற உண்மையை எடுத்துக் காட்டுகிறது.

கலித்தொகை இன்னொரு பாட்டில்:

ஒன்றினார் வாழ்க்கையே
வாழ்க்கை

(கலி: 18-11)

என்று சிறந்த குடும்ப வாழ்வுக்கு, காதல் இருவர் கருத்து ஒருமைப்பட வேண்டியதன் முக்கியத்துவத்தை வலியுறுத்துகிறது.

இதனால்தான் களவியலைத் தொல்காப்பியமும் சங்க நூற்களும் பெருமையாகப் பேசுகின்றன. தமிழகத்தில் அன்று குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஐந்திணைக்கும் உரிய மக்களிடம் களவொழுக்கம் நடப்பில் இருந்து வந்தது என்று அறிகிறோம்.

களவு ஒழுக்கம் என்றால் என்ன?

சங்க நூற்களின் உரையாசிரியர்களில் தலை சிறந்தவர் உச்சிமேற் புலவர் கொள் நச்சினார்க்கினியர். அவர்கூறு கிறார்: ''களவொழுக்கம் என்றால், பிணி மூப்புக்கள் இன்றி, எந்நாளும் ஒரு தன்மையுடையவராய், உருவும் திருவும், குலமும் குணமும் அன்பும் தம்முள் ஒப்ப உடைய வர்களான தலை மகனும் தலை மகளும் பிறர் கொடுப்பதோ

அடுப்பதோ இல்லாமல் ஊழ்வகையால் தாமே எதிர்ப்பட்டுக் கூடி இன்புறுவதாகும்'' என்று.

இத்தகைய களவு ஒழுக்கத்தின் பின், அவர்கள் கற்பொழுக்கத்தில் ஈடுபடுவது சங்ககால வாழ்க்கை முறையாக இருந்தது. கற்பு ஒழுக்கம் என்றால் என்ன? கொள்ளுதற்குரிய முறையுடைய தலைவன், ஊரறியச் சில சடங்குகளோடு தலைவியை அவள் பெற்றோர்கள் கொடுக்க ஏற்றுக் கொள்வதாகும்.

இதனைக் கற்பு என்று ஏன் கூறினார்கள் என்று உனக்குக் கேட்கத் தோன்றும். ஏன் கூறினார்கள் என்பதைச் சொல்கிறேன். அல்ல, பெரும் பேராசிரியர் நச்சினார்க்கினியரைக் கொண்டு சொல்விக்கிறேன் கேள்!

''கொண்ட கணவனைவிடச் சிறந்த தெய்வம் இல்லை எனப் பெற்றோர் கற்பித்தலாலும், அந்தணர், சான்றோர், அருந்தவத்தோர் முதலியோரிடத்து ஒழுகும் ஒழுக்கத்தைத் தலைமகன் கற்பித்தலாலும் தலைமகன் இன்னவாறு பாதுகாப்பான், தலைமகனுக்கு இன்னவாறு குற்றேவல் செய் என்று அங்கியம் கடவுள் சான்றாக மந்திரவகையால் கற்பிக்கப்படுதலாலும் கற்பு எனப்படுவது ஆயிற்று.'' இவ்வாறு நச்சினார்க்கினியர் பொருள் கூறுகிறார்.

கற்பு என்பதற்கு இந்தப் பொருள் சரிதானா? அல்லது வேறு பொருள் உண்டா என்ற ஆராய்ச்சியெல்லாம் இப்பொழுது, இங்கு, உனக்குத் தேவையில்லை. ஆணை ஒட்டிப் பெண் வாழ்ந்தாள் என்பதும், அன்று, ஆணுக்கொரு நீதி, பெண்ணுக்கொரு நீதி இருந்ததென்பதும் மாத்திரம் இங்கு நீ கவனத்தில் வைத்துக் கொண்டால் போதும்.

''வினை ஆடவர்க்குயிர்'' என்றும், ''ஆடவர் மகளிர்க்கு உயிர்'' என்றும், ஆண்-பெண் வேறுபாட்டையும், உயர்வு-தாழ்வையும், குறுந்தொகை நூல் எடுத்துக்

காட்டுவதையும் முன்பு ஒரு கடிதத்தில் தீட்டியிருந்ததை நீ மறந்திருக்க மாட்டாய்.

கலித்தொகை வேறொரு உண்மையை ஒரு சிறந்த பாடல் மூலம் தெரிவிக்கிறது, கேள்!

ஒரு செவிலித் தாய், காட்டு வழியாக வந்து கொண்டிருந்த ஒரு அந்தணனை நோக்கி, ஒரு "ஆண் எழில் அண்ணவோடு" (ஆண் மகனோடு) எனது "மாண் இழை மடவரல்" (மகள்) சென்றதை நீங்கள் கண்டீர்களா?" என்று கேட்டாள்.

அந்தணன் கூறினான்:

"பல உறு நறுஞ்சாந்தம்" (சந்தனம்) மலையிலே பிறந்தாலும் மலைக்கு அதனால் என்ன பயன்? ஒன்றுமில்லை. "சீர் கெழு வெண் முத்தம்" (முத்து) கடலில் பிறந்தாலும் கடலுக்கு அதனால் என்ன பயன்? ஒன்றுமில்லை. "ஏழ் புணர் இன்னிசை" (இசை) யாழில் பிறந்தாலும் யாழுக்கு அதனால் என்ன பயன்? ஒன்றுமில்லை.

"அது போலவே, ஆராய்ந்து பார்த்தால் உங்கள் மகளும் உங்களுக்குப் பயன்படாள்.

"அவள் கற்பிற் சிறந்தவளாகக் காணப்படுகிறாள். தாய் தந்தையரைவிடக் கணவனே சிறந்தவன் என்ற உறுதியோடு அவன் வழியில் மனம் பொருந்திப் போவதைக் கண்டேன். அதுதான் அவளுக்குத் தலையான அறம்!" என்று காதல் வழியில் ஒரு பெண் செல்லப் பெற்றோர் தடையாக நிற்கக்கூடாது என்று இன்றும் வரவேற்கத் தக்க ஒரு உண்மை மிகச் சிறந்த உவமைகளுடன் இந்தப் பாட்டில் விளக்கிச் சொல்லப்படுகிறது என்பது மெய்தான். ஆனால், பெண் ஆண் காட்டிய வழியிலேயே செல்ல வேண்டும் என்ற பழைய நீதியும் அதில் விரவி வருவதை நீ

கவனிக்கத் தவறமாட்டாய் என்று நான் நம்புகிறேன். இன்னொரு 'குறுந்தொகை' ஓவியத்தைப் பார்!

"கடலினும் பெரிது எமக்கு அவருடை நட்பே"

என்று ஐங்குறு நூற்றுத் தலைவி ஒருத்தி கூறுவது போன்று அத்தனை அன்பு தன் தலைவனிடம் உடையவள் தான் நான் கூறப்போகும் குறுந்தொகைத் தலைவியும்.

"தோழி! தலைவர் என்னைப் பிரிந்து குளிர்ந்த பூஞ்சோலையினுள் புகுந்து மறைந்து விட்டார். அந்தச் சோலையைப் பார்த்துப் பார்த்துக் கண்கள் சிவக்க அழுதேன். அன்னை வந்து விட்டாள். வருத்தம் ஏன் என்று கேட்டாள். எனது மணல் விளையாட்டைக் கடல் நீர் வந்து அழித்து விட்டது. அதனால் அழுதேன் என்றேன்" என்று கூறிய ஐந்திணை ஐம்பது (44 த் தலைவியைப் போன்ற சிறந்த களவொழுக்கம் உடையவள் தான் நான் கூறப்போகும் குறுந்தொகைத் தலைவியும்.

ஆயினும் இத்தலைவி எப்படிச் சொல்கிறாள், கேள்!

"ஞாயிறு அனையன்; தோழி!
நெருஞ்சி அனைய என்
பெரும்பனைத் தோளே"

(குறுந்தொகை: 313)

"தோழி! எனது தலைவர் சூரியனைப் போன்றவர்; என்னுடைய பெரிய மூங்கிலைப் போன்ற தோள்கள் நெருஞ்சி மலர்களைப் போன்றவை" என்கிறாள்.

அன்பே! அன்பு சென்ற வழி உள்ளமும் செல்லும். அப்பொழுதுதான் ஆண்-பெண் மன ஒற்றுமையும் அதன் வழி குடும்ப வாழ்வின் நலன்களும் உண்டாகும். இந்த உண்மையை இந்தப் பாட்டு வெளிப்படுத்துவது மிக நன்றாக இருக்கிறது. ஆயினும் ஆண் சூரியன், பெண் நெருஞ்சி மலர் என்ற கண்ணோட்டத்தில் பழைய நீதி—

ஆண் உயர்வு, பெண் தாழ்வு என்றநீதி—தான் ஒலிக்கிறது என்பதைப் பார்க்க நீ தவற மாட்டாய்.

பிற அடுத்த கடிதத்தில்.

## கடிதம் 12

அன்பு மிக்க......

பண்டையத் தமிழ் மக்களின் சமுதாய வரலாற்றைச் சீரமைத்துக் கொள்வதற்குப் பெரிதும் பயன் படக்கூடிய நூற்கள் சங்க நூற்கள். இந்த உண்மையை முன்பு ஏதோ ஒரு கடிதத்தில் உனக்கு எழுதியுள்ளேன் என்று நினைப்பு.

சங்க நூற்களிலும் மக்கள் வரலாற்றைக் கூறும் முக்கியத் துவம் படைத்த நூற்கள் புறநாநூறு, பததுபபாட்டு, பதிற்றுப் பத்து ஆகியவை என்று சென்னைப் பல்லைக் கழகத்தின் வரலாற்றுத்துறைத் தலைவர் கே. கே. பிள்ளை மதிப்பிடு கிறார். நானும் அவ்வாறே கருதுகிறேன். அக நானூறு போன்ற சிறந்த நூற்கள் அகப்பொருளை (காதலை)ப் பற்றிச் சிறப்பாகப் பேசினும் சரித்திர சம்பவங்களும், சமூகப் பழக்க வழக்கங்களும் அவற்றில் ஆங்காங்கு காணக் கிடக்கின்றன. இதை மனதில் பதித்து வைத்துக் கொண்டு உனக்கு வாய்ப்பும் வசதியும் கிடைக்கிற காலத்தில் மேற்படி நூற்களையெல்லாம் நீ நன்றாகத் துருவிப் படிக்க வேண்டும் என்பது எனது பெரு விருப்பம்.

நான் சென்ற சில பல கடிதங்களில் சங்க இலக்கியங் களில் பெண்ணைப் பற்றிய கண்ணோட்டம் எப்படியிருக் கிறது என்பதைச் சிற்சில நூல்களிலிருந்து சிற்சில வாழ்க்கைச் சித்திரங்களை எடுத்துக் காட்டி விளக்க முயன்றுள்ளேன். இங்கொன்று அங்கொன்றாக நான் காட்டியது மிகமிகக் கொஞ்சம். போகப் போக நீயே

படித்துத் தெரிந்து கொள்வதற்கு எனது மேற்படிக் கடிதங்கள் துணை செய்யும். ஓரளவு வெளிச்சமும் தரும். அவ்வளவுதான்.

சங்க கால இலக்கியம் என்று கூறப்படுகிற எட்டுத் தொகை, பத்துப் பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கு (திருக்குறள் பதினெண் கீழ்க்கணக்கில் அடங்கும்.) ஆகிய இலக்கியங்களைப் படித்துப் பார்த்தால் ஓர் உண்மை புலனாகும். அதாவது பெண், சங்க காலத்தில் மிகவும் பெருமைப்படுத்தப் பட்டாள். குடும்ப விளக்கு என்று மதிக்கப்பட்டு மரியாதை அளிக்கப்பட்டாள்.

அந்தக் காலத்தில் பெண்கள் சுதந்திரத்தோடு வாழ்ந்தார்களென்றும், எத்தகைய கட்டுக்காவல் இன்றியும், முக மூடிகள் இன்றியும் பொது இடங்களில் நடமாடினார்கள் என்றும் பத்துப்பாட்டுத் தெரிவிக்கிறது. குறிப்பாக, அந்தத் தொகை நூலில் ஒரு நூலான பெரும்பாணாற்றுப்படை இந்தப் பெண்ணுரிமையை நன்றாக எடுத்துக் காட்டுகிறது. அந்தணச்சேரியிலுள்ள யுவதிகள் ஏரி குளங்களுக்குச் சென்று எவ்வாறு நீர் விளையாடினார்கள் என்பதையும், நாட்டுப் புறங்களில் நடைபெறும் விழாக்களில் எவ்வாறு செல்வச் சீமாட்டிகள் பங்கு கொண்டார்கள் என்பதையும், மேற்படி நூல் படம் பிடித்துக் காட்டுகிறது.

அன்பே! பெரும்பாணாற்றுப்படையிலிருந்து உனக்குச் சில சித்திரங்களை ஒன்றோ இரண்டோ கடிதங்களில் தீட்டிக் காட்ட எனக்கு விருப்பம் உண்டு. ஆனால் நான் எனது இந்த விருப்பத்தை நிறைவேற்றப் போவதில்லை. ஏன் தெரியுமா? கடிதங்கள் பெருகிக்கொண்டே போகும். அவ்வாறு போனால், சங்க இலக்கியத்தைத் தாண்டு வதற்கே குறைந்தது ஆறு மாதம் பிடிக்கும். இந்திய மாதர் இயக்கம் பற்றியும், உலக மாதர் இயக்கம் பற்றியும், இந்தத் தொடர் கடித வரிசையில், பின்னால் விரிவாக எவ்வளவோ எழுத வேண்டி இருக்கிறது. அது மட்டுமல்ல. சங்க

இலக்கியத்திலும், திருக்குறளையோ இதர பதினெண் கீழ்க் கணக்கு நூல்களையோ இன்னும் தொடவில்லை. அவைகளில் வரும் பெண்ணைப் பற்றியகண்ணோட்டத்தை உனக்கு எடுத்துக் காட்ட வேண்டியது மிக அவசியம். எனவே, எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகிய வற்றில் நடத்தும் பெண்ணைப் பற்றிய கண்ணோட்ட ஆராய்ச் சியைக் குறுக்கிவிட விரும்புகிறேன். நிற்க.

பெண், பெரும்பாணாற்றுப்படை சித்திரிப்பது போன்ற உரிமைகளோடு அக்காலத்தில் வாழ்ந்தாள் என்றாலும், கணவன் பால் தூய்மையான பக்தி செலுத்துவதே பெண் ணின் லட்சியக் கடமை என்று சங்ககால இலக்கியம் முழு வதும் கூறுகிறது. இந்தக் கற்புடைமையை வான்மறை என்று புகழப்படும் திருக்குறள் மிகவும் வற்புறுத்திக் கூறுகிறது.

பெண்ணும் ஆணும் சரிநிகர் சமானம் என்ற ஜன நாயகக் கொள்கை, 'மனைவிக்குக் கணவனே தெய்வம்' என்ற கொள்கையை ஒருநாளும் ஒப்புக்கொள்ள முடியாது. அக் காலத்தில் பெண்ணுக்குச் சுதந்திரம் இருந்தது என்று மேலே கூறியதற்கும், இன்றையப் புதுமைப் பெண்ணான உனது சுதந்திர நிர்ணயிப்புக்கும் வெகு தூரம்.

ஜனநாயகத்தில் பொது மகளிர் இருக்க முடியாது. 'கணவனே தெய்வம்' என்ற கொள்கை நிலவிய அந்தக் காலத்தில் பொது மகளிர் (பரத்தையர்) வாழ்ந்தார்க ளென்றும் இளைஞர்களை மயக்கிக் காசு பறித்தார் களென்றும் சங்க இலக்கியம் கூறுகிறது. இந்தப் பொது மகளிர், சமுதாயத்தில் தாழ்வாகக் கருதப்பட்டார் களென்றும் மேற்படி இலக்கியம் கூறுகிறது.

பெண்ணில் சிலர் பலரைப் 'பொது மகளிர்' ஆக்கி இழிவு படுத்திய அன்றைய சமுதாயம், ஆணில் எவனை யும்'பொது மகன்' ஆக்கி இழிவு படுத்தவில்லை என்பது உன் நினைவில் இருக்கட்டும்.

மற்றொன்று.

தமிழ்ப் பேரறிஞராகிய கே. என். சிவராஜ பிள்ளை என்ற பெரியார், ''வம்சாவளி'' (The chronology) என்று ஒரு சிறந்த ஆங்கில நூல் எழுதியிருக்கிறார். அதில் பண்டையத் தமிழ்ப் புலவர்களை வரிசைப்படுத்தி இருக்கிறார். கி மு. 50லிருந்து கி. பி. 200 வரையில் 459 தமிழ்ப் புலவர்களை பத்துத் தலைமுறைகளுக்கு மேலாக வரிசைப் படுத்துகிறார். 25 ஆண்டுகள் கொண்ட ஒரு தலை முறைக்குச் சராசரி 40 புலவர்களை வரிசைப்படுத்துகிறார்.

இதிலிருந்து எனக்கு என்ன படுகிறது தெரியுமா? ஒரு தலைமுறையில் 40 புலவர்கள் என்பது அந்தக் காலத்தில் வாழ்ந்த புலவர்களில் மிகக் குறுகிய எண்ணிக்கைதான். ஆகவே எத்தனையோ புலவர்களுடைய படையல்கள் அழிந்து அவர்களுடைய பெயர்களும் மறைந்து போய் விட்டன.

பண்டையக் காலத்தில் வாழ்ந்ததாக இன்று நமக்குத் தெரிகிற ஆண்-பெண் புலவர்களை ஆய்ந்து பார்த்தால் நமக்குத் தெரிவது என்ன? அவர்கள் தமிழகத்தின் பல் வேறு நகரங்களில், கிராமங்களில் வாழ்ந்திருந்தார்கள். அவர்கள் தோன்றிய தொழில் வழியையும் சமூக வழியையும் பார்த்தால், அவர்கள் அரசர் குலத்திலிருந்தும், விவசாய, வர்த்தக வர்க்கங்களிலிருந்தும், பல்வேறு தொழில் சமூகங் களிலிருந்தும் தோன்றினார்கள் என்று தெரிகிறது.

புறநானூற்றை மட்டும் பார்த்தால், 147 வெவ்வேறு புலவர்கள் பாடிய பாடலின் தொகுப்பு அந்நூல் என்பதைப் பார்க்கிறோம். அவர்களில் அரசர்களையும், பல்வேறு சமூகங்களைச் சார்ந்த ஆண், பெண்களையும், மருத்து வர்களையும், கணக்காயர்களையும், வானநூல் வல்லு நர்களையும், தச்சர்களையும், கொல்லர்களையும், குயவர் களையும் காண்கிறோம். புறநானூற்றில் மட்டும் வருகிற 147 புலவர்களில் 19 பேர் பெண் புலவர்கள் என்பதை உனக்குக்

கோடிட்டுக் காட்டவிரும்புகிறேன், பெண் புலவர்களிலேயே மிகச் செல்வாக்குடையவராக விளங்கிய ஔவை, அரசர்கள் சிற்றரசர்களிடையில் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்த தோடு, தமிழ்ச்சமுதாயம் முழுமைக்கும் ஆற்றல் மிக்க ஞானாசிரியையாகவும் வழி காட்டியாகவும் விளங்கினாள் என்று தெரிகிறது.

இது எதைக் காட்டுகிறது? அன்று, கல்வியும் புலமை யும் ஆண்பாலுக்கு மட்டும் உரிமையுடையனவாயிருக்க வில்லை என்பதைக் காட்டுகிறது. இதை உன் சிந்த னைக்கு விருந்தாக வைக்கிறேன்.

இறுதியாக ஒன்று.

மாவும் மாக்களும்
ஐயறிவினவே
மக்கள் தாமே
ஆறறிவுயிரே

—(தொல். மரபு 32-33)

என்பன தொல்காப்பியச் சூத்திரங்கள். ஆசிரியர் தொல் காப்பியனார், அறிவுடைமையற்ற மனிதப் பிறவி களை மக்கள் என வகுத்து மிருகங்களோடு இணைத்து ஐந்து அறிவு உடையவை என்கிறார். ஐந்தறிவோடு பகுத்தறிவும் பெற்று ஆறு அறிவு படைத்தவர்களையே மக்கள் என்கிறார்.

மக்கள் தாமே
ஆறறிவுயிரே''

என்ற சூத்திரத்திற்கு, உரை ஆசிரியரான பேராசிரியர் உரை கூறும் பொழுது, ''முப்பத்திரண்டு அவயவத்தான் அளவிற் பட்டு அறிவோடு புணர்ந்த ஆடூஉ மகடூஉ மக்களெனப்படும்'' அதாவது முப்பத்திரண்டு உறுப்பு களொடு அறிவும் பொருந்திய ஆண், பெண் இருபாலரும் மக்கள் எனப்படுவர் என்று கூறுகிறார். இதிலிருந்து

அறிவைப் பொறுத்தமட்டில் ஆணும் பெண்ணும் சரிநிகர் என்பதைத் 'தொல்காப்பியர் ஒப்புக்கொள்கிறார் என்று தெரிகிறது.

மேலும், தலைவன், தலைவி இருவரும் "ஒத்த பண்பும் ஒத்த அன்பும், செல்வமும், ஒத்த கல்வியும் உடையவராய் இருத்தல் வேண்டும்" என்று இறைனார் அகப் பொருள் உரையில் நக்கீரனார் என்ற நல்லிசைப் புலவர் கூறுகிறார். இதிலிருந்து, அந்த நாளில் கல்வி பயில்வதில் பெண்ணுக் கும் ஆணுக்கும் சம உரிமையும் சம வாய்ப்பும் இருந்த தென்று தெரியவருகிறது.

மேலும், தொல்காப்பியனார் அடக்கம், மறை, புலப் படாமல் நிறுத்தும் உள்ளம், நேர்மை, செய்யத் தகுந்த வற்றைக் கூறுதல், அறிவுடைமை, உள்ளக் கருத்தறிதல், அருமை ஆகிய ஆறு குணங்களும் பெண்களுக்குரிய பொது வான இயல்புகள் என்கிறார். இதோ பாடல்:

செறிவும் நிறைவும்
செம்மையும் செப்பும்
அறிவும் அருமையும்
பெண்பாலான

-(தொல்-பொருளியல்)

இங்கு, 'அறிவு கொண்ட மண உயிர்' பெண் என்பது தொல்காப்பியத்தின் நோக்கு என்று யாரும் எளிதில் புரிந்து கொள்ளமுடியும்.

இதே தொல்காப்பியம் அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு, பேதமை நிறை (கற்பு) என்பன பெண்களுக்குரிய பண்புகள் என்று 1045-வது சூத்திரத்திலும் "உயிரினும் சிறந்தது நாணமும் நாணத்தினும் சிறந்தது கற்பும்" என்று 1059 ம் சூத்திரத்திலும் கூறுகிறது. இதை உனக்கு, முன்பே ஒரு கடிதத்தில் எடுத்துக் காட்டியிருக்கிறேன்.

அன்பே! 'பெண்ணின் ஆகச் சிறந்த குணம்' என்று கருதப்பட்ட இந்தக் கற்பை பண்டைத் தமிழ் மக்கள், தலைக் கற்பு, இடைக் கற்பு, கடைக் கற்பு என்று முக்கூறு படுத்திக் கூறியுள்ளார்கள். கற்பின் இந்த மூன்று படிகளையே தொல்காப்பியம் மூதானந்தம், புறங்காட்டு நிலை அல்லது பாலை நிலை, தாபத நிலை என்று கூறுகிறது.

இதைப் பற்றிய விளக்கம் நீ விரும்புவாய் என்பது எனக்குத் தெரியும். இதோ சொல்கிறேன்:

தலைக் கற்பு: அதாவது உழுவலன்பால் ஏற்படும் சாக்காடு. கணவன் இறந்ததும் மனைவி உடனே இறப்பது மூதானந்தம். தமிழ் இலக்கியத்தில் ஒரு சான்று தருகிறேன் கேள்!

கோவலன் அநீதமாகக் கொல்லப்பட்டான். அதை அறிந்ததும் பாண்டியன் நெடுஞ்செழியன் தன் செங்கோல் வழுவியதை உணர்ந்தான். உணர்ந்ததும் உயிர் நீத்தான். அவன் மனைவி கோப்பெருந் பெண்டும் அவனுடன் உயிர் விட்டாள்.

இலக்கியம் இதோ:

> ''மன்னவ செல்வுழிச்
> செல்கயான் எனத்
> தன்னுயிர் கொண்டவன்
> உயிர் தேடினாள்போல்
> பெருங்கோப் பெண்டும்
> ஒருங்குடன் மாய்ந்தனள்''

-(சிலப்பதிகாரம்-
மதுரைக் காண்டம்)

இடைக் கற்பு: கணவன் இறந்ததும் அவனோடு தன்னிச்சையாக எரி புகுவது இடைக் கற்பு.

பூத பாண்டியன் தேவியார் பாடிய, ''பல் சான்றீரே'' என்ற புறநானூற்றில் 246வது பாட்டு இதற்கு இலக்கியம்.

பூத பாண்டியன் இறந்தான். அவன் தேவியான பாண்டிமா தேவியும் அவனது ஈமத்தீயுள் பாய்ந்து இறக்கச் செல்கிறாள். சில சான்றோர் அவ்வம்மையாரை விலக்க முயல்கிறார்கள். அப்பொழுது பாண்டிமாதேவி ''கணவனுடன் இறக்கவிடாது தடுக்கும் பொல்லாத சான்றோர்களே! நீர்ச் சோற்றை உண்டு பாயின்றித் தரையில் படுத்து உறங்கி, கைம்மை நோன்பால் காலங்கழிக்கும் பெண் நானல்ல. ஈமத்தீயில் புகுவது உங்களுக்கு அரிதாகத் தோன்றலாம். ஆனால் எனது கணவனை வைத்துள்ள ஈமத்தீ எனக்குப் பொய்கையை ஒத்தது'' என்று கூறி கணவனது ஈமத்தீயில் குதித்து உயிர் நீத்தாள்.

கடைக் கற்பு: கணவன் இறந்தபின் கைம்மை நோன்பு பூண்டு தவம் கிடப்பது கடைக் கற்பு.

''கூந்தல் கொய்து குறுந்தொடி
நீக்கி அல்லி உணவின் மனைவியோடு''

-(புறம் 250)

இந்தப் புறநானூற்று அடிகள் பண்டைக் காலத்தில் கைம்மை நோன்புபூண்ட பெண்கள் கூந்தலை நீக்கிக் கொண்டார்கள் என்பதையும், அணிகலன்களை (நகை நட்டுக்களை) களைந்து கொண்டார்கள் என்பதையும் காட்டுகின்றன.

கணவனோடு மனைவி உலகை நீத்துவிட வேண்டும். அப்படிச் சாகாமல் உலகில் வாழ்ந்தால் அவள் மனித வாழ்வை இழந்து சாகாமல் சாக வேண்டும். இது தொல்காப்பியமும் சங்க இலக்கியங்களும் கூறும் பண்டையத் தமிழர் மரபு. அன்று கற்பு ஆணைக் கட்டுப்படுத்திற்றா? இல்லை. அப்பால் ஒத்த கல்வியும் ஒத்த அறிவும் உடைய

ஒருவனும் ஒருத்தியும் என்ற மரபு ஒத்த கற்பும், ஒத்த வாழ்வும் இல்லையானால் என்ன பயனைத் தரும்?

தமிழ் மக்களின் பொற்காலத்தில், சிறந்த தூய தமிழ் வாழ்வு என்றெல்லாம் பெருமிதத்தோடு பேசப்படுகிற சங்க காலத்தில் பெண்ணுக்கு உரிமையும் விடுதலையும் இருந்ததா? இந்தக் கேள்விக்கு நீதான் பதில் சொல்ல வேண்டும்.

அடுத்த கடிதத்தில் வள்ளுவப் பெருந்தகையின் ''வான்மறை''க்கு உன்னை அழைத்துச் செல்லப் போகிறேன்.

## கடிதம் 13

அன்பு மிக்க.........

''அவன் ஒரு யுகத்திற்கு மட்டும் உரியவன் அல்ல; அவன் எல்லா யுகங்களுக்கும் எக்காலத்திற்கும் உரியவன்.''

இந்தக் கடிதத்தில், உன்னைத் திருக்குறளுக்கு அழைத்துச் செல்ல நினைத்தேன். அதே கணத்தில், திருக்குறள் அருளிய வள்ளுவப் பெருந்தகையை நினைத்தேன். நினைத்ததும் மேலே தீட்டிய வரிகள் என் நினைவில் மின்னின.

இந்த வரிகளைத் தீட்டியவன் யார் தெரியுமா? பென்ஜான்சன் என்ற ஆங்கில அறிஞன். யாரைப் பற்றித் தெரியுமா? ஆங்கிலக் கவிச் சக்கரவர்த்தியாகிய ஷேக்ஸ்பிய ரைப் பற்றி, ''ஷேக்ஸ்பியர் நினைவுக் காணிக்கை''

(To the memory of Shakespeare) என்ற கட்டுரையில் பென்ஜான்சன், மேற்கண்டவாறு ஷேக்ஸ்பியரைப் புகழ்ந் திருக்கிறான்.

நமது வள்ளுவப் பெருந்தகைக்கோ 'அந்த'ப் புகழ்ச்சி தகும், அதற்கு அப்பாலும் தகும் என்பது என் கருத்து.

சாரத்திலும், தனிச் சிறப்போடு மனித வாழ்க்கையின் குறிநெறிகளைக் காட்டுவதிலும், சிந்தனை ஓட்டத்திலும் திருக்குறள், சங்க காலத் தமிழ் மக்களின் உலகியல், பண்பியல் சிந்தனை (Secular humanistic, thought) சத்தை உருட்டித் திரட்டி அருளியிருக்கிறது.

வள்ளுவப் பேராசான், அவன் காலத்தில், தமிழ், ஆரியம், பாலி ஆகிய மொழிகளில் காணக்கிடைத்த மத இயல், உலகியல் இலக்கியங்களை எல்லாம் நன்றாகப் பயின்றிருந்தான். ஆகவே, அவ்விலக்கியங்களில் சிதறிக் கிடந்த உயர்ந்த கருத்துக்களையும் சிறந்த முறையில் பண்படுத்தத் திருக்குறளில் இழைத்திருக்கிறான். எனவே, எம் மதத்தாரும் அவனைத் தம் மதத்தவன் என்று கூறத் தகும் நிலைமை ஏற்பட்டிருக்கிறது. ஏன்? ஆத்திகரும் நாத்திகரும் ஒருப்போல வள்ளுவனை உச்சி மேல் வைத்து மெச்சுகிறார்கள்.

இன்னும் கேள்!

திருக்குறளின் உள்ளடக்கத்தில் பழமையும் புதுமையும் விரவிக்கிடக்கின்றன. சங்க காலத்தின் அறிவுக் களஞ்சிய மாகத் திருக்குறள் எதிரொலிக்கிறது. மேதா விலாசமும் உள்ளுணர்வும் ஒளி விட்டுப் பிரகாசிப்பதில் திருக்குறள் ஆதிமூலமாகவும் சுத்த சுயம்புவாகவும் திகழ்கிறது. கிட்டத் தட்ட இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் எழுந்த அந்த நூலிலுள்ள பலப் பல குறட்பாக்கள் இன்றைய நாளையப் புதுமையையும் உலகு தழுவிய பொதுமையையும் காட்டி நம்மைத் திகைக்க வைக்கின்றன.

திருக்குறளை அறிந்த வெளிநாட்டுப் பன்மொழிப் புலவர்கள்-மேதைகள் உலக இலக்கியங்களிலேயே, இதை ஒப்பற்ற தனி இலக்கியமாக மதிப்பிடுகிறார்கள். வீரமா முனிவர் என்ற பெஸ்கி பாதிரியாரும், ஜி. யூ. போப்பை யரும், இன்றைய உலகு புகழ் தத்துவ ஞானியான ஆல்பர்ட் ஜூவட்ஸரும் திருக்குறளை இமயமலையின் எவரெஸ்ட் சிகரத்தில் வைத்துப் போற்றுகிறார்கள். சோவியத் விஞ்ஞானப் பேரவையின் கீழ்த்திசைக் கழகப் பேராசிரியர் திருக்குறளை, ''எக்காலத்திற்கும், எந்நாட்டிற்கும், எம் மக்களுக்கும் விலை மதிப்பிடற்கரிய பொக்கிஷம்'' என்றும், ''காலத்தை வென்ற இறவா இலக்கியம்'' என்றும், ''மொழி, இன எல்லைகளைக் கடந்த மனித மகா காவியம்'' என்றும் போற்றிப் புகழ்கிறார்.

இந்த நூற்றாண்டுத் தமிழ்ப் புலவர்கள் எப்படித் திருக் குறளையும் வள்ளுவனையும் மதிப்பிடுகிறார்கள் தெரியுமா? பாரதி திருக்குறளை ''வான் மறை'' என்கிறான். கவிமணி ''தமிழ் மாதின் இனிய உயிர் நிலை'' என்கிறார்.

''உலகத்திலே பேரறிவாளர் என்று அழைத்தற்கு வள்ளுவரைக் காட்டிலும் சிறந்த உரிமையுடையவர் அரியர்'' என்று முடிவு கட்டுகிறார், தமிழுக்கு ஆராய்ச்சி மன்னனாக விளங்கிய வையாபுரிப்பிள்ளை.

''தூய்மையே மணிமார்பு;
தொன் மறையின்
பிழிசாராய்த் துலங்குகின்ற
வாய்மையே மணிநாக்கு:
மங்கலம் செய்
மனைவாழ்வே கண்கள்; வீர
நேயமுறும் பொதுநலமே
திருமேனி

நிறையின்ப முறுவல் பூத்துத்
தாயமுதம் விளங்குகின்றாள்
அறத்தேவி
திருக்குறளாய் தாள் பெற்றுய் வோம்''

என்று பாடுகிறார் சுத்தானந்த பாரதியார்.

இந்தக் கடிதத்தை இதுவரை நீ படிக்கும்பொழுது உனது இன்முகம், அன்றலர்ந்த செந்தாமரைபோல் மலர்ந்து ஒளி விடும் என்பதை நான் இங்கிருந்தே பார்க்கிறேன். நீ இன்று மலர்ந்திருக்கும் தமிழ்க் கொடியில், இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் 'வள்ளுவன்' என்ற ஒரு அரும் பெரும் மலர் விரிந்து, என்றும் குன்றா மணம் பரப்பி நின்று வருகிறது என்பதை நினைந்து நீ இறும்பூது எய்துவாய் என்பதில் சந்தேகமில்லை.

அன்பே! இத்தகைய வள்ளுவப் பெருந்தகை, உலக மனிதனுக்கு வழி காட்ட அருளிய நிகரற்ற கலைப் படையலான திருக்குறளுக்கு, அது காட்டும் பெண்ணைப் பற்றிய கண்ணோட்டத்தைப் பார்க்க, உன்னை அழைத்துச் செல்கிறேன், வா!

''பிறப்பு ஒக்கும் எல்லா உயிர்க்கும்'' (குறள் 972) என்று வள்ளுவன் கூறுகிறான். ''எல்லா உயிர்க்கும்'' என்பதில் திருக்குறளின் கண்ணோட்டம் பளிச்சென்று வெளிச்சமாகிறது.

பிறப்பினால் எல்லோரும் சரி நிகர் சமானம். வெள்ளையனோ கருப்பனோ, வடக்கத்தியானோ தெற்கத்தியானோ, ஆணோ பெண்ணோ, பிறப்பில் உயர்வு தாழ்வு இல்லை. இது குறள் கொள்கை.

மேலும், திருக்குறளில் காணக்கிடைக்கும் 1330 அருங் குறள்களில் ஒன்றிலேனும் தமிழ் என்றோ, தமிழன் என்றோ தமிழகம் என்றோ பேசப்படவில்லை. உலகு என்றும், உயிர் மக்கள் என்றுமே பேசப்படுகிறது. எனவே

திருக்குறள், மனித வர்க்கம் முழுவதையும் ஒன்றாகப் பார்க்கும் நூல் என்பதையும், பிறப்பை வைத்து ஆண்-பெண், உயர்வு-தாழ்வு பாராட்டும் நூல் அல்ல என்பதையும், நீ முதன் முதலில் உணரவேண்டும். இதனால்தான் குறள் ஆசிரியர், மன்னனையோ, குடிமகனையோ, மத குருவையோ பார்த்துப் பாடவில்லை என்றும் மனிதனையே பார்த்துப் பாடுகிறார் என்றும் வெளிநாட்டுப் பேரறிஞர்கள் வாயாரப் புகழ்கிறார்கள்.

''பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்''என்று தொடங்கிய மேற்படிக் குறட்பா, ''சிறப்பு ஒவ்வா செய்தொழில் வேற்றுமையான்'' என்று முடிகிறது. செய்கிற தொழில் வேறுபட்டால் மனிதர்களிடையில் பெருமையோ சிறுமையோ ஏற்படும் என்றும் திருக்குறள் கூறுகிறது. பெருமை, பெண்ணுக்கும் ஆணுக்கும் பொது என்கிறான் வள்ளுவப் பேராசான். வள்ளுவத்தின்படி (வள்ளுவன்கொள்கைப்படி), செயலில் சிறந்து பெண் பெருமை அடையலாம்; செயலில் இழிந்து ஆண் சிறுமை அடையலாம்.

இனி வள்ளுவனின் மற்றொரு வாய்மொழியைக் கேட்போம்!

''எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு''

(குறள் 392)

'கல்வி'யைப் பற்றிக் கூறவருகிற வள்ளுவன்பல குறட்பாக்களில் மேற்கண்ட குறட்பாவையும் அருளுகிறான்.

இதன் பொருள் என்ன? வாழும் மக்களுக்கு, எண் எழுத்து என்ற இருவகைக் கலைகளும் கண்கள் என்று சொல்லத் தக்கவை என்று ஆன்றோர் கூறுவார் என்பதாகும். இதிலிருந்து, படிப்பு ஆணுக்கும் பெண்ணுக்கும் பொது என்பது குறள் நெறி என்று தெட்டத்தெளிவாகத் தெரிகிறது.

இந்தப் பாட்டிலும், 'வாழும் உயிர்க்கு'' என்று கூறிக் கல்வி உரிமை ஆண்-பெண் வேற்றுமையைத் தாண்டியது என்று அறிவுறுத்துகிறான் வள்ளுவப் பெரியோன் என்பதை நீ நன்றாகச் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

''அறிவுடையோர் எல்லாம் உடையார்'' (குறள் 430) என்று திருக்குறள் அறிவுடைமையை ஏற்றிப் போற்றுகிற பொழுதும், அது ஆண்-பெண் பேதத்திற்கு இடம் கொடுக்க வில்லை.

''செல்வத்துள் செல்வம் செவிச் செல்வம்'' (குறள் 411) என்று செவிச் செல்வத்தின் சிறப்பைத் திருக்குறள் வியந்து புகழ்கிற பொழுதும் அந்தச் சீரிய செல்வம் இரு பாலாருக்கும் பொது என்றே குறிப்புத் தருகிறது

மேற்கூறியவைகளெல்லாம் திருக்குறள் வெளியிடும் பொதுமைப் பார்வையை எடுத்துக் காட்டுகின்றன.

ஆயினும் நீ வேறொரு உண்மையும் கவனத்தில், கொள்ள வேண்டும். அது என்ன? திருக்குறளில் 'உயிர்', 'மக்கள்' என்ற சொற்கள் வரும் இடங்களில் ஆணையும் பெண்ணையும் குறிப்பதாகவும் குறிப்பது போலவும் வருகின்றன என்பது மெய் என்றாலும் திருக்குறள் முழுவதிலும், பொதுப் படையாக 'அவள்' என்ற சொல்லைவிட 'அவன் என்ற சொல்தான் முதலிடம் கொடுக்கப்பட்டுப் பயிலப்படுகிறது. படர்க்கை ஆண்பால் ஒருமைதான் பொதுவாகப் பயிலப்படுகிறது. திருக்குறளை ஊன்றிப் படித்து இந்த உண்மை காண நீ முயல வேணடும்.

அறத்துப் பால், பொருட்பால் ஆகியவற்றில் ஒன்று இரண்டு அதிகாரங்களிலும் காமத்துப் பாலிலும் பெண்ணை ஒட்டிய பொருள்கள் குறிப்பிட்ட வகையில் முதன்மையாகப் பேசப்படுகின்றன; எனினும், பொதுவாகத் திருக்குறள் முச்சூடும் ஆணை முன்னிறுத்தி, முக்கியப்படுத்தியே பேசப் படுகிறது. பொது மறையான திருக்குறள் ஏன்

இவ்வாறு பேசுகிறது என்று உனக்குக் கேட்கத் தோன்று கிறது அல்லவா?

அடுத்து வரும் கடிதங்களில் இதைப்பற்றி நிதானமாக நான் விளக்குவேன். அவற்றை ஆவலோடு எதிர்பார்ப் பாய் என்று நான் சொல்லத்தேவையில்லை.

இந்த மடலை முடிக்கு முன் ஒரு சொல். நான் வேண்டிக் கொண்டபடி, நான் உனக்கு எழுதும் கடிதங் களை நீ படித்து விட்டு, அவைகளை ஒன்று சேர்த்துப் பத்திரமாக வைக்கிறாயா? அதோடு உனது சகோதரி களுக்கும் படிக்கக் கொடுத்து அவர்களுடைய எதிரொலி களையும் கேட்டு மகிழ்கிறாயா?

எத்தனை அதிகமான சகோதரிகளுக்குப் படிக்கக் கொடுக்க முடியுமோ அத்தனை பேருக்கு நீ எனது கடிதங் களைப் படிக்கக் கொடுக்க வேண்டும். அவர்களையும் பயன் பெறச் செய்ய வேண்டும் என்பதே எனது ஆவலும், எதிர்பார்ப்பும் ஆகும். இன்று இதோடு முடிக்கிறேன்.

## கடிதம் 14

அன்பு மிக்க.......

இருளிலும் ஒளி வீசும் மாணிக்கம்; பகலிலும் மங்கிக் கிடக்கும் கரித்துண்டு; திருக்குறள் இருளிலும் ஒளி வீசும் கோகினூர் வைரம் என்று தலைமுறைத் தத்துவமாக நமக்குச் சொல்லி வந்திருக்கிறார்கள். அது மெய்தானா?

மானிடம் என்ற ஒருமை ஆண் பெண் என்ற இருமை யாகக் காட்சி அளிக்கிறது. வாழ்க்கை மின் மீட்டி (Battery) ஆண்மை என்ற ஆகுமின்னலையும் பெண்மை என்ற போகு மின்னலையும் உடையது. இந்த இரண்டு மின்னல்களும் கூடி உருவாகும் வாழ்வின் மின்பொறி, உலகில் பலப்பல

இன்ப துன்பங்களை நுகர்கின்றது. ஒன்றில்லாமல் மற்றொன்றுக்கு வாழ்வு இல்லை. இந்த இரண்டிற்கும் இன்றியமையாத இயல் இன்ப வேட்கையே காதல்.

தமிழ்ப் பெருமக்கள் இந்தக் காதலை ஒரு அருங்கலையாக வளர்த்திருக்கிறார்கள். இதனைக் கருப்பொருளாகக் கொண்டு ஏராளமான இலக்கண இலக்கியங்களைச் செய்திருக்கிறார்கள்.

இக் காதல் ஒரே காலத்தில் ஐம்புலன்களையும் நுகரவைக்கும் ஆற்றல் உடையது. இதைத் தமிழ்ச் சான்றோர் அகப்பொருள்என்று கூறினர். ஆண் பெண் கூடி வாழ்வின்பம் பெறும் பொருட்டு நமது முன்னோர் அகப்பொருள் வகுத்தார்கள். மறைமலை அடிகளாரின் ஆராய்ச்சிப்படி, பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு ஆகிய பழந்தமிழ் இலக்கியங்களில் ஏறத்தாழ மூன்றில் இரண்டு பங்குப் பாடல்கள் அதாவது சுமார் இரண்டாயிரத்து ஐந்நூறு பாடல்கள், அகப்பொருள் பேசுகின்றன. நமது முன்னோர் அகப் பொருளை எவ்வளவு முக்கியப்படுத்தினார்கள் என்பதை நீ ஆழ்ந்து சிந்திக்க வேண்டும் என்பதற்காகவே இதை உனது கவனத்திற்குக் கொண்டு வருகிறேன்.

தொல்காப்பியத்தின் பொருளதிகாரம், அகத்திணை இயல், களவியல், கற்பியல், பொருளியல் ஆகிய இயல்களில் காதல் இலக்கணத்தை நன்கு விளக்கிக் கூறுகிறது. அக நானூறு, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, நற்றிணை முதலிய நூல்களும், திருக்குறளில் காமத்துப் பாலும், பழந்தமிழ் இலக்கியத்திலேயே சிறந்த அகப் பொருள் இலக்கியப் படையல்கள். இவற்றில் வள்ளுவனின் காமத்துப்பால், காதற்கலையின் தன்னேரிலாத பைம்பூஞ் சோலை.

வள்ளுவனின் காமத்துப்பால் களவியலையும் கற்பியலையும் போதிக்கின்றது. திருக்குறள் கண்ணோட்டத்தில்

'களவு' இல்லாமல் 'கற்பு' இல்லை; 'களவு' முதற்படி 'கற்பு' இரண்டாவது படி.

களவொழுக்கம் வேண்டும் என்று தமிழ்ப் பெருமக்களின் ஆயிரம் ஆயிரம் ஆண்டு அனுபவம் வற்புறுத்துகிறது. இங்கு 'களவு' என்றால் திருட்டா? அல்ல, விபசாரமா? அல்ல. கருத்து ஒருமித்த காதல், இரகசியமாக முதிர்ச்சி பெறுவதற்கு ஒரு வாய்ப்புத்தான் களவு; இரகசியக் காதலுக்குத் தோழியும் துணை.

நாளடைவில் மறைவு வெளிப்படையாகும்; வீடு அறியும். ஊர் அறியத் திருமணம் நடைபெறும். கண்ணைக் கவர்ந்து, கருத்தில் நிறைந்து, இருவரும் ஒருவராகி, வாழ்வின் இயல்பினால் வாழ்ந்து இன்பம் அடைவர். ஊடிக்கூடிப் பிரிவால் வருந்திச் சேர்க்கையால் மகிழ்வர். இவ்வாறு கற்பியல் நிகழும்.

இங்கு உனது கவனத்திற்கு வர வேண்டியது என்ன? வாழ்க்கைத் துணை தேடுவதில் ஆணைப் போன்று பெண்ணுக்கும் சுதந்திரம் இருந்தது, குறள் எழுந்த தமிழகத்தில் என்பதுதான்.

''கண்டுகேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே உள.'' (குறள் 1101)

இந்தக் குறளில் வள்ளுவப்பெருந்தகை என்ன சொல்கிறான்? தலைவன் தலைவியை எவ்வாறு நிர்ணயிக்கிறான் என்பதைச் சொல்கிறான். எவ்வாறு நிர்ணயிக்கிறான்? சகல புலன்களுக்கும் இன்பம் அளிக்கும் இன்பத்தின் உறைவிடம் தலைவி என்று நிர்ணயிக்கிறான். ஆகையால், வள்ளுவனின் தலைவன் தலைவியை 'அழகே! அமுதே! அணங்கே! இன்பமே!' என்று வாயார மனமார அழைக்கிறான்.

காமத்துப் பாலின் கருத்து முழுவதையும் வடித்தெடுத்தால்,

> ''ஆனந்த வெள்ளத்து
> அழுந்தும் ஓர் ஆருயிர்
> ஈர் உருக்கொண்டே''
>
> -திருக்கோவையார்.

என்று ஆண்-பெண் உறவு தெள்ளத் தெளிவாகத் தெரிகிறது.

இது இங்கு நிற்கட்டும், இனி இல்வாழ்க்கையைப்பற்றித் திருக்குறள் கூறுவதைப் பார்ப்போம்.

இல்லறம் எல்லையற்ற அனுபவக்கூடம். பார்த்துப் பார்த்துப் பட்டுத் தேறி, மாசு மறுவுகள் அற்று, பக்குவம் பழுக்கும் பள்ளிச்சாலை அது. இயல்பினால இல்வாழ்வு வாழ வேண்டும். வாழ்வு எப்படி வாழவேண்டுமோ அப்படி வாழ வேண்டும். இவ்வுலக வாழ்விலேயே தெய்வத் தன்மை பெற்று வாழ வேண்டும். இதுதான் வள்ளுவனின் உள்ளம்.

> ''வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வான் உறையும்
> தெய்வத்துள் வைக்கப்படும்'
>
> (குறள் 50)

வாழ்வு ஆங்கு வாழ்வது எப்படி? வள்ளுவப் பேராசான் வழி காட்டுகிறான். எப்படி? இரண்டு ஆணைகள் மூலம்: அவை எவை?

1. பழி அஞ்சு: பழி பாவங்களில் இறங்காதே, ஈட்டாதே.
2. பகுத்து உண்: உனது உடைமையைப் பலருக்கும் பயன் படும் விதத்தில் பகுத்துக் கொடுத்து அனுபவி.

இந்த இரண்டு கட்டளைகளையும் தலைமேல தாங்கி வாழ்க்கையை நடத்தினால், வாழ்க்கை வழி அடைத்துப் போகாது; சந்ததி (வழித்தோன்றல்) எஞ்சாது, இளைக்காது வளரும்; மக்கள் குலம் தழைத்து ஓங்கும்.

''பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்சல் எஞ்ஞான்றும் இல்''

—(குறள் 44)

இத்தகைய உயர் நோக்கும் தனிச் சிறப்பும் உள்ள இல் வாழ்வுக்கு, இரண்டு கண்கள் போன்றவை அன்பும் அறமும் என்கிறான் வள்ளுவப் பெருமான்.

அன்பு! ஆம், கணவர் மனைவிகளிடம் உடலும் உயிரும் போல் அன்பு; அருமருந்தன்ன மக்களிடம் உயிரினும் இனிய அன்பு; ஆருயிர்களிடம் அப்பு அழுக்கற்ற அன்பு-இத்தகைய அன்பு இல்வாழ்க்கையில் தழைத்துச் செழிக்க வேண்டும். அறம் இல்வாழ்க்கையில், எண்ணும் எண்ணத்தில் எல்லாம், பேசும்பேச்சில் எல்லாம், செய்யும் செய்கையில் எல்லாம் அறவுணர்ச்சி நின்று நிலவ வேண்டும்.

அழகும் பெருமையும் உடைய இத்தகைய இல்வாழ்க்கையினால் தனக்கும் தன்னை அண்டியவர்களுக்கும் தனது நாட்டிற்கும் பெரும் பயன் விளையும். வீடு வாழ்ந்தால் நாடு வாழும்; நாடு வாழ்ந்தால் நானிலம் வாழும்; எனவே இல்லற ஒழுக்கம் ஊரின், நாட்டின், உலகத்தின் உயிர்.

இவ்வாறு, எல்லா நன்மையும் நல்கும் இல்வாழ்வில் ஆணுக்கு ''வாழ்க்கைத் துணை நலம்'' பெண் என்று கூறுகிறான்; கூறிப் பெண்ணின் பெருமையைக் கூறுகிறான் வள்ளுவப் பேராசான்.

எப்படி என்று கேட்க, பொங்குமாங் கடல் போலப் பொங்கும் உன் உள்ளம் என்பதை நான் அறிவேன்.

உனக்கு ஏற்படும் இந்த ஆவல் துடிப்பு உனக்காக மட்டு மல்ல, உனது சகோதரிகளுக்காகவும்தான். பிற பின்.

## கடிதம் 15

அன்பு மிக்க......

இன்று அறத்துப்பாலில் இரண்டு அதிகாரங்களை எடுத்துக் கொண்டு, அவற்றில் வள்ளுவப் பேராசானின் பெண்ணைப் பற்றிய கண்ணோட்டத்தை உனக்குக் காட்ட விரும்புகிறேன். ஒரு அதிகாரம் 'வாழ்க்கைத் துணை நலம்' மற்றொன்று 'பிறனில் விழையாமை'.

'வாழ்க்கைத் துணை நலம்' என்ற அதிகாரத்தில், வள்ளுவன் ஆணுக்கு இல்வாழ்வின் துணையாகிய பெண்ணின் நலன்களைக் கூறுகிறான். 'பிறனில் விழையாமை' என்ற அதிகாரத்தில் பிறன் மனைவியை நாடக் கூடாது என்று கூறுகிறான். இந்த இரண்டு அதிகாரங்களிலும் வள்ளுவம் பெண்ணைப் பற்றி எப்படி நிர்ணயிக்கிறது? ஆணைப்பற்றி எப்படி நிர்ணயிக்கிறது? இருவருக்கும் உள்ள உறவைப் பற்றி எப்படி நிர்ணயிக்கிறது என்பனவற்றைத் தெளிவாக உன்னால் காண முடியும் என்பது என் கருத்து.

'வாழ்க்கைத் துணை'க்கு வள்ளுவன் விளக்கம் சொல்கிறான். என்ன சொல்கிறான்? இல்வாழ்க்கைக்கு ஏற்ற நற்குண நற்செய்கைகள் எல்லாம் உடையவளும், கணவனின் வருவாய் தெரிந்து குடும்பத்தை நடத்துகிறவளும் 'வாழ்க்கைத் துணை' என்கிறான். நன்று!

மனைவி சிறந்தவளாயில்லா விட்டால் குடும்ப வாழ்வு சிறந்ததாயிராது என்கிறான். நன்று!

நல்லாள் வீட்டில் இல்லாதது இல்லை. தீயாள் வீட்டில் நல்லதொன்றும் இல்லை என்கிறான். நன்று!

இங்கு இல்வாழ்க்கையில் பெண்ணின் (மனைவியின்) பெருமைக்குரிய பங்கை 'டுத்துக் காட்டுகிறான். நன்று! ஆனால்... ஆனால் என்ன?

அத்தகைய மனைவி, கணவனை எப்படி மதித்து வாழ வேண்டும் என்று திருக்குறள் கூறுகிறது தெரியுமா? கணவனை மனைவி 'தெய்வம்' என மதித்துத் தொழுது வாழ வேண்டும் என்கிறது. இவ்வாறு கணவனிடம் மனைவி காட்டும் உறுதியான 'பக்தி'தான் பெருமையாகப் பேசப் படுகிற 'கற்பு' என்று கூறுகிறது. இத்தகைய 'கற்பு கரசி' தன்னைக் கற்பிலிருந்து வழுவாமல் காத்துக் கொள்வதோடு, தனது கணவனையும் குடும்பத்தின் பெருமையையும் பேணிக் காக்க வேண்டும் என்று கூறுகிறது.

கற்புடைய பெண்ணை, நிறை குணமுடைய பெண்ணை வள்ளுவப் பேராசான் ஏற்றிப் போற்றுகிறான், ஐயமில்லை. ஆனால், அவளை இல் வாழ்வில்—சமுதாய வாழ்வில், கணவனுக்கு-ஆடவனுக்குத் 'துணை' என்ற அளவில் மட்டுமே மதிப்பிடுகிறான். மனைவியை வாழ்க்கையின் சகல துறைகளிலும் 'கணவனுக்கு ஈடு - இணை' என்று மதிப்பிடுகிறானா? இல்லை.

திருக்குறள் முழுவதையும் நிதானமாக எழுத்து எண்ணிப் படித்துப்பார்! ஒரு குறட்பாவில் கூடப் 'பொய்யில் புலவன்' வாய் மொழியாக "வாழ்வில் ஆணும் பெண்ணும் ஈடு, இணை" என்ற சமத்துவக் கருத்து வெளிப்படவே இல்லை.

பெண் ஆணுக்கு ஒப்பான 'இணை' இல்லை. பெண் ஆணுக்கு 'வாழ்க்கைத் துணை' இந்தத் துணை சமத்துவ அடிப்படையில் துணை அல்ல. ஆணைத் 'தெய்வம்'

ஆக்கி அவனிடம் 'பக்தி' செலுத்திப் பணிவிடை புரியும் துணை.

இது பண்டைத் தமிழர் கருத்துப் பொதுமை அருளிய வள்ளுவப் பேராசானும் பெண்ணைப் பொறுத்த மட்டில் அடிப்படைப் போக்கில் 'காலக் கருத்தை'த் தாண்டவில்லை.

நிறை குணமுடைய 'கற்பின் நல்லாள் கொழுநனைத் தெய்வமாக'த் தொழ வேண்டும். சரி நிறை குணமுடைய கணவனையா? கோணல்மாணல் குணமுடைய கணவனையா? பதில் இல்லை. குணங்கெட்ட கணவனைக் கும்பிட வேண்டாம் என்று வள்ளுவன் ஒரு இடத்தில் கூட அறிவுறுத்துவதாகத் தெரியவில்லை. மனைவிக்குக் கணவன் தெய்வம். சரி, கணவனுக்கு மனைவி யார்? தொழுகிற 'தெய்வம்' அல்ல. சமுதாய வாழ்வில் ஈடு இணையான மனிதப் பிறப்பும் அல்ல.

''பிறப்பு ஒக்கும்; சிறப்பு ஒவ்வாது'' என்ற வள்ளுவப் பெருந்தகையின் கருத்தோட்டம், பெண்ணைப் பொறுத்த மட்டில், ஆணிடம் போல், முழு மூச்சோடு அமுலாகிறதா என்று நீ ஆழ்ந்து சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

அன்பே! 'பிறன் இல் விழையாமை' என்ற அதிகாரத்திற்குச் செல்வோம் வா! அந்த அதிகாரத்தில், பெண்ணைப் பற்றிய வள்ளுவப் பேராசானின் கண்ணோட்டம் தெக்கத் தெளிவாகக் காட்சியளிப்பதைக் காட்டுகிறேன், பார்!

இந்த அதிகாரத்தில் விழுப்பம் தரும் ஒழுக்கமுடையவர்கள், பிறர் மனைவிமாரைக் காம மயக்கத்தால் விரும்பக் கூடாது என்று வள்ளுவப் பேராசான் வலியுறுத்துகிறார், மிகச் சரி.

ஆனால் 'மற்றவன் மனைவி' என்றகருத்தைத் தெரிவிக்க இந்த அதிகாரத்தில் பயிலப்படும் குறிப்பிட்ட சொற்றொடர்கள் வள்ளுவத்தின் 'பெண்ணைப் பற்றிய கண்ணோட்டத்தை'த் தெளிவு படுத்துவனவாக இருக்கின்றன

வள்ளுவன் தீட்டியுள்ள சில சொற்றொடர்களை உனது கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன்.

ஒன்று:

"பிறன் பொருளாள் பெட்டு ஒழுகும் பேதைமை ஞாலத்து
அறம் பொருள் கண்டார்கண் இல்" -(குறள் 141)

இதில் "பிறன் பொருளாள்" என்ற சொற்றொடர்: இதன் பொருளாவது, 'பிறனுக்குப் பொருளாகும் தன்மையுடையவள்' என்பதாகும்.

இரண்டு:

"அறன் இயலான் இல்வாழ்வான் என்பான் பிறன் இயலாள்
பெண்மை நயவாதவன்" - (குறள் 147)

இதில் "பிறன் இயலாள்" என்ற சொற்றொடர்; இதன் பொருளாவது, பிறனுக்கு உரிமையுடையவளாகி, அவனுடைய இயல்போடு இயல்பாகி நிற்பவள்' என்பதாகும்.

மூன்று:

"அறன்வரையான் அல்ல செயினும் பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று" -(குறள் 150)

இதில் 'பிறன் வரையாள்" என்ற சொற்றொடர்; இதன் பொருளாவது, "பிறன் எல்லையுள் நிற்பவள்" என்பதாகும்.

சிந்தித்துப் பார்! "பிறன் பொருளாள்", "பிறன் இயலாள்", "பிறன் வரையாள்", இதுதான் அன்று கணவனுக்கும் மனைவிக்கும் இருந்த உறவு. ஆணுக்கும்-பெண்ணுக்குமிருந்த உறவு என்று திருக்குறள் காட்டுகிறது. ஆணுக்குப் பெண் உடைமை; சரிதானா? ஆணுக்குப் பெண் நிழல்; சரிதானா? ஆணுக்குப் பெண் அடக்கம்; சரிதானா?

எத்தனையோ பொதுமையும் புதுமையும் விரவிய கருத்துக்களைத் திருக்குறள் அள்ளி அள்ளி வீசிக் கொண்டிருக்கிறது. ஆயினும் பெண்ணைப் பற்றிய பார்வையில் நிலப்பிரபுத்துவத்தின் பார்வையே எதிரொலிக்கிறது.

திருக்குறளில் எல்லாம் முற்போக்கான கருத்துக்களாக இல்லை என்று நீ வள்ளுவப் பேராசானைக் குறைகூறப் போக மாட்டாய் என்பது எனக்குத் தெரியும். திருக் குறளிலும் காலத்தின் ஒலி (அது இன்றைக்குப் பிற்போக்கு ஒலி) எதிரொலிக்கிறது என்பதை நீ உணர்ந்தால் போதும்.

அடுத்த கடிதத்தில் பொருட்பாலில் உள்ள ''பெண் வழிச்சேறல்', ''வரைவின் மகளிர்'' என்ற இரண்டு அதி காரங்களுக்கு உன்னைக் கூட்டிச் சென்று, அங்கு வள்ளுவம் பெண்ணைப் பற்றிய கண்ணோட்டத்தை எப்படிக் காட்டுகிறது என்பதை விளக்குவேன். அன்பு.

## கடிதம் 16

அன்பு மிக்க......

'பெண்வழிச் சேறல்' என்ற அதிகாரத்தைப் படி. 'பெண் வழிச் சேறல்' என்றால் பொருள் என்ன? பெண் வழிச் செல்லுதல் அதாவது மனைவியின் விருப்பப்படி நடத்தல், அதாவது மனைவி சொன்னபடி நடத்தல் என்பதாகும்.

இந்தப் 'பெண்வழிச் சேறல்' என்ற அதிகாரத்தில் அக்காலத்தில் ஆண் பெண்ணை, கணவன் மனைவியை எவ்வாறு மதித்து நடந்தான் என்பது கூறப்படுகிறது. பண்டைக் காலத் தமிழகத்தில், கணவனின் கண்ணில் மனைவிக்கு இருந்த மதிப்பை வள்ளுவப் பேராசான் வடித் தெடுத்து, பொதுமைப்படுத்தி இந்த அதிகாரத்திலுள்ள குறட்பாக்கள் மூலம் நமக்கு அருளுகிறான்.

இந்தக் குறட்பாக்களில் பெய்துள்ள கருத்துக்களை தனித் தனியாகவும் ஒட்டு மொத்தமாகவும் நீ அலசி ஆய்ந்து பார். பகுத்தறிவுத் திறனோடும் உனது சொந்த உள்ளுணர்ச்சியோடும் துருவித் துருவிச் சிந்தித்து உண்மை காண முயன்று பார்!

இந்த யுகம் ஜனயுகம். நீ ஜனநாயக காலத்தில் பிறந்து, ஜனநாயகச் சூழ்நிலையில் தவழ்ந்து, ஜனநாயக உணர்வில் வளர்ந்து, ஜனநாயகக் கொழுந்தாகத் திமிர்ந்து நிற்கும் புதுமைப் பெண்.

பெண்கள், வைய வாழ்வு தன்னில் எந்த வகையிலும் ஆண்களோடு 'சரி, நிகர், சமானமாக' வாழவேண்டும் என்ற நவயுகக் கொள்கையின் திரு உருவமாகக் காட்சி அளிப்பவள் நீ; எனவே உனது பார்வை புத்துலகப் பார்வையாகத்தான் இருக்க முடியும். நீ வைதிகப் பார்வையோடு திருக்குறளைப் பார்க்க முடியாது. பார்க்க வேண்டுமென்று பார் விரும்பினாலும் அது தவறு. நிற்க.

மானுடத்தை மிகப் பெரிதாக மதிப்பவனே வள்ளுவப் பேராசான். இதில் ஐயம் திரிபுக்கு இடமில்லை. மனிதர்கள் எல்லோரும் ஒரே தரம் என்பதே பொய்யில் புலவன் பொன்னுரை. இதிலும் என்னைப்போல் உனக்கும் சந்தேகம் ஏற்படாது என்று நம்புகிறேன்.

ஆயினும் 'பெண்வழிச் சேறல்' என்ற அதிகாரத்தை நீ படித்தால், அதில் வரும் கருத்துக்கள் உன்னை அதிர்ச்சியடைய வைக்கும் என்றே கருதுகிறேன்.

இதற்கு முன் இந்த அதிகாரத்தை நீ படித்திருக்கிறாயோ, என்னவோ எனக்குத் தெரியாது. ஆயினும், அண்மையில் நான் உனக்குத் தொடர்ச்சியாக எழுதி வரும் கடிதங்களை நீ ஊன்றிப் படிப்பதன் மூலம் உன்னிடம் உருவாகியிருக்கும் புதிய கண்ணோட்டத்தோடு இந்த அதிகாரத்தைப் படித்துப்பார். அப்பால், "உனக்கு

அதிர்ச்சி ஏற்படும்'' என்று நான் கூறுவது சரியா, தப்பா என்று எழுது; சரிதானா?

இனி மேலே செல்வோம்.

மனைவியை 'வாழ்க்கைத் துணை' என்று கூறிய வள்ளுவம், 'மனைவி இல்லத்தின் எல்லாம்' என்று பெருமைபடப் பேசிய வள்ளுவம், இவ்வாறு பெண்ணின் வாழ்க்கைப் பங்கை ஏற்றிப் போற்றிய வள்ளுவம், மனைவியின் பேச்சைக் கணவன் இசைவோடு கேட்டால், கேட்டபடி நடந்தால் என்ன பலாபலன் ஏற்படும் என்பதைச் சொல்கிறது, கேள்!

முதலில் வள்ளுவன் இந்த அதிகாரத்தில்,

''மனைவிழைவார் மாண்பயன் எய்தார் வினைவிழை வார்
வேண்டாப் பொருளும் அது''

-( றள் 901)

என்கிறான். அதாவது, மனைவியின்பால் உள்ள அன்பால், அவள் சொன்னபடி நடக்கிற கணவன் ஒரு நாளும் பெரும் பயன் அடையமாட்டான் என்கிறான்.

அடுத்த குறட்பாவில், கடமையை விரும்பாமல் மனைவியை விரும்புவோனுடைய ஆக்கம், மானக்கேடாக முடியும் என்கிறான்.

''பேணாது பெண்விழைவான் ஆக்கம் பெரியதோர்
நாணாக நாணுத் தரும்''

-(குறள் 902)

மூன்றாவது குறட்பாவில் 'இல்லாள் கண் தாழ்ந்த இயல்பின்மையை, அதாவது மனைவியினிடத்தில் தாழ்ந்து நடக்கும் இழி தன்மையைப் பற்றிக் கூறுகிறேன்.

அடுத்த பாட்டில், மனைவிக்குப் பயந்து நடப்பவனுக்கு மறுமைப் பயன் இல்லை, இம்மையிலும் செயல் திறன் சோபிக்காது என்கிறான்.

இதற்கு அடுத்த பாட்டில், பெண்டாட்டிக்குப் பயப்படுகிறவன், உலகத்தில் எந்த நல்ல காரியம் செய்வதற்கும் பயப்படுவான் என்கிறான். இதோ பாடல்:

''இல்லாளை அஞ்சுவான் அஞ்சுமற்று எஞ்ஞான்றும்
நல்லார்க்கு நல்ல செயல்'' -(குறள் 905)

மற்றொரு பாட்டில், மனைவிக்கு ஏவல் செய்கிற கணவனிடத்தில் அறச்செயல், பொருள் ஈட்டல், மற்றக் கடமைகள் இருக்க முடியாது என்கிறான்.

பிறிதொரு பாட்டில், வள்ளுவப் பெருந்தகை கூறுகிறான்:

''பெண் ஏவல் செய்தொழுகும் ஆண்மையின் நாணுடைப்
பெண்ணே பெருமைஉடைத்து'' (குறள் 907)

என்று, அதாவது மனைவி பேச்சைக் கேட்கும் கணவனை விட இயல்பாகவே நாணமுள்ள பெண்ணே பெருமை உடையவள் என்கிறான்.

இன்னொன்று சொல்கிறான்:

''இமையாரின் வாழினும் பாடிலரே இல்லாள்
அமையார்தோள் அஞ்சுபவர்'' -(குறள் 906)

''மனைவியின் தோளுக்கு அஞ்சி நடப்பவன், இவ்வுலகில் இந்திர பதவி கிடைத்தாலும் பெருமையுற மாட்டான்'' என்று.

இனி மேற்கூறிய கருத்துக்களையெல்லாம் ஒட்டு மொத்தமாகச் சேர்த்துப்பார்! மனைவியை விரும்பி அவள் பேச்சைக் கேட்கக் கூடாது. கடமையுணர்ச்சி உள்ளவன் மனைவிக்கு வணங்கவோ இணங்கவோ கூடாது. மனைவி

பேச்சைக் கேட்பவனுக்கு வாழ்வில் எந்த உயர் நிலையும் பயன்படாது. இம்மை மறுமை இன்பம் அவனுக்கு இல்லை. நன்றாகச் சிந்தித்துப் பார்!

''தையல் சொற் கேளேல்'' என்ற கொள்கை இந்தப் 'பெண் வழிச் சேறல்' அதிகாரம் முழுவதும் ஆணி அடித்து நிலைநாட்டப் படுகிறது. ''கொள்வது தள்ளுவது'' என்ற பிரச்சினையில் சரி-தப்புக் கண்டு நடந்து கொள்ள வேண்டும் என்றும், இது ஆண்-பெண் உறவுக்காக கடமையைப் புறக்கணிக்கக் கூடாது என்றும் கூறினால் நமக்குப் புரிந்து கொள்ள முடியும். அதை விட்டு, பெண் பேச்சைக் கேட்கக் கூடாது என்பதற்காகக் கடமை முந்தி என்பதோ, பெண் பேச்சைக் கேட்டால், உலகமே கவிழ்ந்து விடும் என்பதோ, கணவனுக்கு மனைவி வணங்க வேண்டுவதைப் போல மனைவிக்கும் கணவன் வணங்க வேண்டி வரும் என்பதை மறுப்பதோ, நம்மால் புரிந்து கொள்ளவும் முடியவில்லை; ஏற்றுக் கொள்ளவும் முடிய வில்லை.

'ஆண் ஏவல் செய்தல்' பெண்களுக்குத் 'தெய்வ வழி பாடு' என்று வள்ளுவம் கூறுகிறது, 'பெண் ஏவல் செய்தல் ஆண்களுக்கு மானக்கேடு, நாசப் பாதை, நரகப் பயணம்' என்றும் வள்ளுவம் கூறுகிறது. இவ்வாறு ஆணுக்கு ஒரு நீதி, பெண்ணுக்கு ஒரு நீதி கூறுவது, பொதுமைக்கும் உடன் பாடானதல்ல; ஜனநாயகப் புதுமைக்கும் உடன் பாடானதல்ல.

திருக்குறளின் காலம், புதிய ஜனநாயகத்தின் காலமல்ல என்பது எல்லோரும் அறிந்த செய்தி. ஆனால் திருக் குறள் ''தெய்வப் புலவனின் பொதுமறை'' அல்லவா? அதில் இந்தப் ''பெண்வழிச் சேறல்'' அதிகாரத்தில் வரும் பெண்ணைப் பற்றிய கண்ணோட்டம் வள்ளுவத்தின் 'புனிதமான' பொதுமைக் கண்ணோட்டத்திற்கு உடன்

பாடானது தானா? அன்பே! நீ நிதானமாகச் சிந்தித்துச் சொல்! உனது சகோதரிகளான புதுமைப் பெண்களோடு கலந்து பேசி அவர்களுடைய கருத்துக்களையும் கடிதம் மூலம் சொல்.

ஆனானப்பட்ட வள்ளுவப் பேராசானுக்கும், அவன் காலத்து நிலப்பிரபுத்துவக் கருத்தான பெண்-ஆண் ஏற்றத் தாழ்வுக் கருத்தைத் தாண்ட முடியவில்லை என்று நான் சென்ற கடிதத்தில் எழுதினேன் அல்லவா? அதற்கு முதல் தரமான எடுத்துக்காட்டு வள்ளுவனின் இந்தப் ''பெண் வழிச் சேறல்'' என்ற அதிகாரம்.

அடுத்த கடிதத்தில் ''வரைவின் மகளிர்'' என்ற அதி காரத்தின் கருத்தோட்டமும், கண்ணோட்டமும். அப்பால், சங்க இலக்கியத்தில் பெண்கள் பற்றிய கண்ணோட்டத்தின் தொகுப்புரை.

## கடிதம் 17

அன்பு மிக்க......

இந்தக் கடிதத்தில் ''வரைவின்மகளிர்'' என்ற அதி காரத்தில் குறளாசிரியன் கூறும் கருத்தைப் பார்ப்போம்.

முதலில் இந்த அதிகாரத்தில் காட்டப்படும் கருத்தோட் டத்தைக் கேள்; பின்னர் அதை நீ சிந்தித்துப் பார்.

'வரைவின் மகளிர்' வரையறை இல்லாத பெண்கள் அதாவது ஒழுக்கத்தில் வரையறை இல்லாத பெண்கள்.

ஒரு ஆணிடமோ அல்லது பெண்ணிடமோ காணப் படும் ஒழுக்கக் கேட்டை எடுத்துக் காட்டுவது அல்லது கண்டிப்பது அல்லது திருந்த வழிகூறுவது வேறு, பெண் சமூகத்தில் ஒரு பகுதியினரை நிலையான ஒழுக்கம் கெட்டவர்களாகப் பிரித்து வைத்துப் பேசுவது வேறு; எனவே, பெண் மக்களில் ஒரு பகுதியினரை 'வரைவின்

மகளிர்' (பொது மகளிர்) என்று அழைப்பதை நீ சகிக்க மாட்டாய் என்பது எனக்குத் தெரியும். அதிலும் தமிழ்ப் பெருமக்களின், அல்ல, உலகப் பெருமக்களின் வணக்கத்திற்கு என்றும் உரியவனாக விளங்கும் வள்ளுவப் பேராசான் 'வரைவின் மகளிர்' என்று பெண்ணைப் பிரித்துக் காட்டுவதைக் கண்டு சகிக்க முடியாது வருந்துவாய் என்பதும் எனக்குத் தெரியும்.

'வரைவின் மகளிர்' என்று வள்ளுவன் பேசுகிறான். ''வரைவின் மகன்'' என்று வள்ளுவன் பேசவே இல்லை. 'கயவன்' 'கீழ் மகன்', 'பூரியர்', 'மக்கட்பதடி' என்றெல்லாம் குணங்கெட்ட ஆணை வள்ளுவன் இகழ்ந்து பேசுகிறான். ஆனால் பெண்ணைப் 'பொது மகள்' என்று இகழ்ந்து பேசி ஒரு 'பிரிவாக'க் கூறுவதுபோல் ஆணைப் 'பொது மகன்' என்று இகழ்ந்து பேசி வள்ளுவன் ஒரு பிரிவாகப் பிரித்துக் காட்டவில்லை. இந்த ஒருதலை நீதி ஏன் என்று நீ கேட்பாய் என்பது எனக்குத் தெரியும்.

இப்படிக் கேட்கும்போது ஒரு உண்மையை நீ நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். சங்க காலத்தில், 'இல்லக்கிழத்தியாக' முதல் வரிசைக்குரிய 'மனைவி' ஆணுக்கு ஒருத்தியிருந்தாள். மேற்கொண்டு காதலித்து மணமுடித்துக் கொண்ட 'இரண்டாவது', 'மூன்றாவது' என்று மனைவியர் இருந்தார்கள். காதலித்து இன்பம் அனுபவித்த 'வைப்பு'கள் இருந்தார்கள். அதற்கு மேல் பரத்தையர் இருந்தார்கள்.

ஆணோடு உறவு படுவதில் பெண் பல்வேறு தரத்தில், ரகத்தில் அன்று மதிக்கப்பட்டாள் என்று தெரிகிறது. முதல் மனைவியர், இதர மனைவியர், வைப்பாட்டி, பரத்தை இவர்கள் தரத்திலும் மரியாதையிலும் வேறுபட்டு நடத்தப் பட்டார்கள். இது உனக்குத் தெரியும், ஏற்கனவே நான் எடுத்துக் காட்டியுள்ளேன். ஆனால் பெண்ணோடு உறவு படுவதில் ஆண் இவ்வாறு தரத்திலும் வரிசையிலும்

நிலையாகப் பிரித்து வைக்கப்பட்டு அன்று மதிக்கப் பட்டனரா என்று நீ கேட்பாய் என்பதும், 'இல்லை' என்ற பதில் உனக்குத் தெரியும் என்பதும் எனக்குத் தெரியும்.

அக் காலத்தில் ஒரு பெண்ணுக்கு மேற்பட்ட பெண் களோடு வாழ்ந்தவனையோ, பெண் உறவில் உறுதி கெட்ட வனையோ அதாவது வரையறை இல்லாமல் நடந்த வனையோ வள்ளுவன் குறை கூறியிருக்கிறான் என்பது மெய். ஆனாலும், அவன் 'இல்லறம்' நடத்தத் தகுதி யில்லாத 'பொது மகன்' என்று பிரித்து ஒதுக்கி, இழித்துக் காட்டப்படவில்லை.

வள்ளுவப் பேராசான் காலத்துச் சமுதாயச் சூழ்நிலை இது. இது உனது சிந்தனை ஓட்டத்தின் பின்னணியாக இருக்கட்டும்; இருக்கும் என்று நம்புகிறேன்.

நிற்க. இனி 'வரைவின் மகளிர்' அதிகாரத்திற்கு வருவோம்.

வள்ளுவப் பேராசான்,

> 'வரைவின் மகளிரை'
> ''அன்பின் விழையார் பொருள்
> விழையும் ஆய் தொடியார்''

என்று கூறுகிறான். அதாவது அன்பின் காரணமாக ஆடவரை விரும்பாமல், பொருளின் காரணமாக விரும்புகிற பொது மகளிர் என்று கூறுகிறான். சரி! இந்தக் கருத்தை நீ சிந்தித்துப் பார்!

பொருள் காரணமாக விரும்பினால் பொதுமகள்; சரி, அன்பின் காரணமாக எத்தனை பெண்கள் வேண்டு மானாலும் ஒரு ஆடவனை விரும்பலாமா? கூடி வாழலாமா என்று நீ கேட்பாய், திருக்குறளில் இதற்கு நேர் பதில் இல்லை என்றே எனக்குப் படுகிறது. அன்புக்காக அல்ல, பொருளுக்காகவோ அல்லது வேறு உலகியல் தேவை

களுக்காகவோ ஆண் ஒரு பெண்ணையோ, பெண் களையோ கூடி வாழ விரும்பினால், அவனை என்ன சொல்வது? ''பொதுமகன்' என்று சொல்லலாமா என்று நீ கேட்பாய். இதற்கும் வள்ளுவப் பேராசான் நேர் பதில் சொல்லவில்லை என்றே தோன்றுகிறது.

பயனுக்காக இனிய சொல் கூறுகிற ''பண்பில் மகள்'' என்று பொதுமகளை இழிவாகக் கூறுகிறது திருக்குறளின் 912வது குறட்பா. சரி, ஆனால், பயன் கருதாத தூய அன்பு பெண்ணிடம் காட்டாத ஆணைத் திருக்குறள் இது போன்று திட்ட வட்டமாக இழித்துக் கூறுகிறதா? இவ் வாறு நீ ஒரு கேள்வி போட்டால், எனது குறளறிவு 'இல்லை'என்று பதில் சொல்ல வேண்டிய நிலையிலேயே இருக்கிறது.

'பொருள் பெண்டிர்' 'பொதுநலத்தார்' 'புன்னலம் பாரிப்பார்' 'மாயமகளிர்' 'வரைவிலா மாணிழையார்' 'இரு மனப் பெண்டிர்' என்று 'வரைவின் மகளிர்' அதிகா ரத்தில் வள்ளுவப் பேராசான் கூறுகிறான். அதாவது ''பொருளை விரும்பும் பெண்கள்'' என்றும், 'பொருள் தருவார்க்கெல்லாம் தமது உடம்பை விற்பவர்'' என்றும் ''புன்மையான நலத்தை அடகு வைப்பவர்'' என்றும், ''வஞ்சகம் நிறைந்த பெண்கள்'' என்றும் நன்னடைத் தையில் வரைமுறை இல்லாதவர் என்றும், ''இரு வகைப் பட்ட மனம் உடையவர்'' என்றும் பொது மகளிரை இகழ்கிறான் வள்ளுவப் பெருந்தகை. சரி. ஆணை இந்த மாதிரிக் கண்ணோட்டத்தோடு தமிழ்ப் பேராசான் குறை கூறுகிறானா என்று நீ கேட்டால் நான் 'ஆம்' என்று பதில் சொல்ல முடியாது.

பெண்களைப் பரத்தையர்களாக்குகிற வரைவின் மகளிரைப் பேணிக் காப்பாற்றுகிற சமுதாயத்தையோ, ஆடவர்களையோ இந்தக் கேட்டுக்கு மூலகாரணமாக்கி

வள்ளுவன் பேசுகிறானா என்று நீ கேட்டால் ''இல்லை'' என்றே நான் விடையளிக்க நேரும்.

பிறன் மனைவியை விரும்பக் கூடாது என்று ஆண் மகனுக்கு வள்ளுவன் அறிவுறுத்துகிறான். பிற மகளை (அதாவது தான் காதலித்து மணந்த ஒருத்தியை அல்லது மற்ற மணமாகாத பெண்ணை) ஆண்மகன் விரும்பக் கூடாது என்று வள்ளுவன் துல்லியமாக, தெளிவாக அறிவுறுத்துகிறானா? வள்ளுவனின் ஒட்டுமொத்தக் கருத்தோட்டம் என்ன இந்தப் பிரச்சினையில்?

இந்த வினாக்களுக்கு நிதானமாக நீ பதில் தெரிந்து கொள்ளத் திருக்குறளைத் திரும்பத் திரும்பப் படித்து அசை போடு. வள்ளுவனின் வான்மறையை உச்சி மேல் வைத்து மெச்ச வேண்டிய நீ, நான் சொன்னபடி செய்வாய் என்று நம்புகிறேன்.

வள்ளுவன் பெண்ணுக்குக் 'கற்பை' அறிவுறுத்துகிறான். ஆனால் ஆணுக்குக் ''கற்பை'' அறிவுறுத்தவில்லை. பதிலாக, ''பிறன் இல் விழையாமை'', ''பெண்வழிச் செல்லாமை'', ''பொருட் பெண்டிர் முயக்கம் பொருந்தாமை'' ஆகியவைகளை அறிவுறுத்துகிறான்.

பெண்ணை அணுகு முறைக்கும் (Approach) ஆணை அணுகு முறைக்கும் தமிழர் குலக் கொழுந்தான வள்ளுவப் பேராசானின் அணுகுமுறையில் வேறுபாடு - மாறுபாடு காணக் கிடக்கிறதா? 'ஆம்' என்பதே எனது பணிவான கருத்து.

அப்படியானால் Differentiated Approach அதாவது வெவ்வேறு சூழ்நிலையில் வெவ்வேறு பிரச்சினையில் வெவ் வேறு தரத்தில் வெவ்வேறு ஆட்கள்பால் வெவ்வேறு அணுகு முறை கைக்கொள்ளுதல் தவறா என்று கேட்கலாம். தவறல்ல. வெவ்வேறு அணுகு முறைகளைக் கைக்கொள்ளலாம் என்பதே என் கருத்து.

அப்படியானால் ஆணிடத்திலும் பெண்ணிடத்திலும் வெவ்வேறு அணுகு முறையைக் கைக்கொள்ளக் கூடாதா என்று கேட்கலாம். சிலபல இடங்களில் சிலபல நிலைகளில் கைக்கொள்ளலாம். கைக் கொள்ள வேண்டும் என்று கூட நான் சொல்லத் தயார்.

ஆனால் ஆண்-பெண் இரு பாலாரையும் பார்க்கும் அடிப்படையான பார்வையில் பொதுமை வேண்டும். வள்ளுவமும் பொதுமை வேண்டும் என்றே வற்புறுத்துகிறது. ஆனால் அந்தப் பொதுப் பார்வை நிலப்பிரபுத்துவ சமுதாய வாழ்வில் இல்லை. பெண்ணை உயர்த்திச் சிலபல வேளைகளில் சிலபல இடங்களில் பேசலாம். ஆனால், ஆண் உயர்வு பெண் தாழ்வு என்பதுதான் நிலப் பிரபுத்துவச் சமுதாயத்தின் அடிப்படைப் பார்வை. பெண் ஆணுக்கு அடிமை உடைமை என்பதுதான் அந்தச் சமுதாயத்தின் ஊறிப் போன பிற்போக்கான பார்வை.

இந்தப் பார்வையை ஒட்டிய கருத்துக்கள் திருக்குறளில் இங்கும் அங்கும் நிழலாடுகின்றன என்பதே எனது கருத்து. ஆயினும் வள்ளுவப் பேராசானின் கருத்தோட்டம் அவனுக்கு முந்திய கருத்தோட்டத்தைவிட பெண்ணைப் பற்றிய கருத்தோட்டத்திலும் சரி பெண் ஆண் உறவைப் பற்றிய கருத்தோட்டத்திலும் சரி முன்னேற்றக்கூறுகள் உடையதாயிருக்கிறது என்பதையும் நீ உணர வேண்டும்.

இதை அடுத்த கடிதத்தில் விளக்குவேன்.

## கடிதம் 18

அன்புள்ள......

[illegible] உனக்கு வள்ளுவனின் திருக்குறளைப் பற்றி, அந்தப் பேராசான் அதில்பொருள்களை நடத்திச் செல்லும் நிகரற்ற முறை பற்றி குறைந்தது நூறு கடிதங்கள் எழுத வேண்டும்

என்பது எனதுஆவல். ஆனால் இந்தத் தொடர் கடிதங்கள் அந்த ஆவலை நிறைவேற்ற இடந்தரா எனினும் வள்ளுவம் குறித்து, இங்குத் தேவையான பொருள்கள் பற்றி இன்னும் இரண்டொரு கடிதங்கள் தீட்ட விரும்புகிறேன்.

திருக்குறளை எப்படிப் படித்துப் பயன் பெற வேண்டும் என்பதைச் சங்கப் புலவர் ஒருவர் கூறியதாக ஒரு பாடல். அதில் இரண்டு வரிகளை உனக்குச் சொல்கிறேன், கேள்!

''உள்ளுவது உள்ளி உரைத்தல்
உரைத்து அதனைத்
தெள்ளுதல் அன்றே செயற்பால''

என்கிறார். அந்தப் புலவர் கூறுவது போல் குறள் உண்மைகளைத் ''தெள்ளி எடுத்துப்'' பயன் படுத்தும் நன் முயற்சியில் நாம் ஈடுபடுவோமானால், பெரும் பயன் பெறுவோம் என்பதில் ஐயமில்லை.

அப்போது நாம் மற்றொரு புலவர் கூறியது போல்,

''அறன் அறிவோம் ஆன்ற
பொருள் அறிவோம் இன்பின்
திறன் அறிவோம்''

அதோடு வீடும் (விடுதலையும்) தெளிவோம். சந்தேகமில்லை.

அதனால்தான் பிறிதொரு புலவர், வள்ளுவப் பேராசானின் 'முப்பாலை' ஆய்தொறும், ''ம ப்புலவோர்க்கு அறிவு ஊறும்'' என்கிறார்.

அன்பே! இவற்றையெல்லாம் நீ மனதில் பதித்து வைத்துக்கொண்டு திருக்குறளைப் படிக்க வேண்டும். பெண்ணைப் பற்றிய வள்ளுவனின் கண்ணோட்டத்தையும் அப்படித் தான் படிக்க வேண்டும்.

இனி, வள்ளுவனின் 'வான்மறை'யைக் கற்கும் பொழுது நீ கவனத்தில் வைத்துக் கொள்ள மூன்று பொருள்களை உனக்கு நினைவு ஊட்ட விரும்புகிறேன். இந்த மூன்று பொருள்களையும் நினைவில் வைத்துக் கொண்டு தான் நான் உனக்கு இதுவரை எழுதிய வள்ளுவத்தின் 'பெண் பற்றிய கண்ணோட்டத்தை'ச் சிந்திக்க வேண்டும். இனி எழுதப் போகும் தொகுப்புரையையும் எண்ணிப் பார்க்கவேண்டும்.

இனி, அந்த மூன்று பொருள்களையும் உனக்குச் சொல்கிறேன்:

1. எந்த நூலை எடுத்துக் கொண்டாலும், அதை இயற்றிய ஆசிரியன் மனிதன் என்பதையும், மனித உருத் தாங்கிய எவனும் முழு நிறைவாளன் அல்ல, குறைபாடு உடையவனே, ஆகவே மனிதன் ஆக்கிய நூலில் தவறுகள் இருக்கலாம் என்பதையும் நீ நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும்.

இந்த உண்மையில் தெளிவு பெற்றுத்தான் நாலடியாரும்,

''நெல்லுக்கு உமியுண்டு,
நீருக்கு நுரையுண்டு,
புல்லிதழ் பூவிற்கும் உண்டு''

என்று கூறுகிறார்.

இங்கு நீ கற்கவேண்டிய வள்ளுவப் பெருந்தகையே என்ன கூறுகிறான் தெரியுமா?

'அரியகற்று ஆசு அற்றார்கண்ணும் தெரியுங்கால்
இன்மை அரிதே வெளிறு''

என்று கூறுகிறான். ''துருவி ஆராய்ந்தால் நானும் சரி, எனது முப்பாட்டனும் சரி மனிதன் தவறு செய்யக் கூடியவன் என்பதை உணர முடியும்'' என்று ஆணித்தர

மாக எடுத்துக் காட்டி, 'மனிதரில் தவறு செய்யாதவர்கள் உண்டு' என்பவர்களை வள்ளுவப் பெருந்தகை எச்சரிக்கை செய்கிறான்.

எனவே, வள்ளுவன் வாய்க்கேட்பினும் ''அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு'' என்று வள்ளுவப் பேரா சான் அறிவுறுத்துகிறான்.

இதை நன்றாக மென்று மென்று சிந்தித்துப்பார்.

2. உண்மைகள் நிலையானவை, தற்காலிகமானவை என இருவகைப்படும். அறம், மூல அறம் என்றும் சார்பு அறம் என்றும் இருவகைப்படும்.

நிலையான உண்மையை மூல அறத்தை எல்லா நாட்டு அறிஞர்களும் எக்காலத்தும் ஒப்புக்கொள்வார்கள். அந்தந்த நாட்டுக்கும் அந்தந்தக் காலத்திற்கும் மட்டும் உண்மையாக உள்ளவைகளை யாரும் மறுப்பு இன்றி ஒப்புக் கொள்ள முடியாது.

எனவே, அன்பே! திருக்குறளை அலசிப் பார்க்க முனைந்தால், நீ மேற்கூறிய இரண்டு வகை உண்மை களையும் காணக்கூடும். அப்பொழுது உனது கடமை என்ன? நிலையான உண்மை எது? தற்காலிக உண்மை எது? அடிப்படை அறம் எது? சார்பு அறம் எது என்பதைக் கண்டு பிடித்து நிலையான உண்மையை, அடிப்படையான அறத்தை எடுத்துக் கொள்ள வேண்டும். தற்காலிக உண்மையை-சார்பு அறத்தைத் தள்ளிவிட வேண்டும். அப்பொழுதுதான் ''மெய்ப்பொருள் காண்பது அறிவு'' என்று வள்ளுவன் கூறுகிறானே, அந்த அறிவின் பயனை அடைய முடியும்.

இதையும் நீ நன்றாக ஆய்ந்தோய்ந்து சிந்தித்துப் பார்.

3. நிலையான உண்மையும் தற்காலிக உண்மையும் அடிப்படை அறமும், சார்பு அறமும் ஒன்றுக்கொன்று முரணாகத் தோன்றும் என்பதில் ஐயமில்லை. இதை நீ திருக்குறளில் காணக்கூடும். மேலும், முரண்பாடு இப்படி மட்டும்தான் தோன்றும் என்றும் நீ நினைக்கத் தேவையில்லை. நிலையான உண்மைகள் என்று நான் கூறினேனே, அவற்றிலும் கூட முரண்பாடுகள் தோன்றக் கூடும்.

'உண்மை உரைத்தல்' என்பது எல்லாக் காலத்திற்கும், எல்லா நாட்டிற்கும், எல்லா மக்களுக்கும் மாறாத நிலையான உண்மை.

ஆயினும் வள்ளுவன் வாய்மையின் இலக்கணத்தை இரண்டு வகையாக வகுத்துக் கூறுகிறான். இரண்டும் ஒன்றுக்கொன்று முரண்பாடு உடையதாய்த் தோன்றுகின்றன.

> ''தன் நெஞ்சு அறிவது பொய்யற்க பொய்த்தபின்
> தன் நெஞ்சே தன்னைச் சுடும்''
>
> -(குறள் 29௩)

> 'மனத்தொடு வாய்மை மொழியில் தவத்தொடு
> தானம் செய்வாரில் ;லை''
>
> -(குறள் 295)

இந்தக் குறள்களில் உள்ளதை உள்ளபடியே, அறிந்ததை அறிந்தபடியே சொல்வதுதான் வாய்மை என்கிறான் வள்ளுவப் பேராசான்.

ஆனால் அதே வள்ளுவப் பேராசானே,

> ''வாய்மை எனப்படுவது யாது எனின் யாதென்றும்
> தீமை இலாத சொலல்''
>
> -(குறள் 291)

''பொய்மையும் வாய்மை இடத்த புரை தீர்ந்த
நன்மை பயக்கும் எனின்'' (குறள் 292)

என்னும் குறள்களில், நடந்ததோ, நடவாததோ, அறிந்ததோ, அறியாததோ பிறர்க்குத் தீமை விளையாது நன்மை தருவதைப் பேசுவதே வாய்மை என்று கூறுகிறான்.

இவ்வாறு முரண்பாடுகள் கண்டால் வள்ளுவன் உண்மைகளைக் கூறும் இடம், பொருள், ஏவல்களையும் இதர அம்சங்களையும், அதாவது சர்வாம்சங்களையும் கணக்கிலெடுத்துக் கொண்டு குறளுண்மைகளை மதிப்பீடு செய்ய வேண்டும்.

இதையும் நீ ஆழ்ந்து சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

மேற்கூறிய முறை துறைகளைக் கடைப்பிடித்து, அடுத்த கடிதத்தில் வள்ளுவத்தின் பெண் பற்றிய கடிதங்களைத் தொகுத்துக் கூறுவேன்.

## கடிதம் 19

அன்பு மிக்க......

சென்ற ஆறு கடிதங்களில் தொடர்ச்சியாக வள்ளுவனைப் பற்றியும், திருக்குறள் பெண்ணைப் பற்றிக் காட்டும் கண்ணோட்டத்தைப் பற்றியும் ஓரளவு விளக்கிக் காட்டினேன். நீயாக விளக்கம் பெறுவதற்கு எனது விளக்கம் துணையாக இருக்கும். அவ்வளவுதான்.

வ்ள்ளுவப் பேராசான் மாறுதலைஒப்புக் கொள்கிறவன். அவன் தன் அறிவே முழு அறிவு என்று நினைக்கிறவன் அல்ல. அவன் மற்றவர் அறிவுக்கும் மதிப்புக் கொடுக்கிறவன். அவன், 'கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய் கேளாரும் வேட்ப மொழியும்' சொல்வன்மையுடையவன். இந்த உண்மைகளை எல்லாம் நான் மேற்குறிப்பிட்ட ஆறு கடிதங்களிலும் பலபட எழுதியிருக்கிறேன்.

சங்க காலத்துத் தமிழ்ப் புலவர்கள் காட்டியுள்ள களவியல்-கற்பியல் வாழ்வைக் கவனத்தில் வைத்துக் கொண்டு பார்த்தால், வள்ளுவனின் காமத்துப் பால் உனக்குப் பிரமாதமாகத் தோன்றும் என்பது நிச்சயம். வள்ளுவனின் அகப் பொருள் வாழ்க்கைச் சித்திரங்கள் கை வந்தவை. வளர்ச்சியையும், பக்குவத்தையும் தெள்ளிதில் காட்டுபவை என்பதைக் காமத்துப் பாலில் நீ நன்றாகக் காண்பாய்.

கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்றறிந்து, ஐம் புலன் ஆர இன்பந் தரும் பெண்ணணங்கை, வள்ளுவப் பேராசான் இச்சை போல் நடக்க விடவில்லை; சமுதாய உணர்வோடு இல்லறத்தில் ஈடுபடுத்துகிறான். மனைவி என்ற முறையில் அவளை ஆணின் ''வாழ்க்கைத் துணை நலம்'' ஆக்குகிறான்.

''வையத்துள் வாழ்வு ஆங்கு வாழ'' ஆடவனுக்குப் பெண்ணிற் பெரிய துணை இல்லை என்று வள்ளுவப் பெருந் தகை அறிவுறுத்துகிறான். சங்க காலச் சான்றோரின் இல் லறம் பற்றிய-பெண்ணின் தகுதி பற்றிய-சிறந்த கருத்துக் களை எல்லாம் தன் மயமாக்கி, மேலும் வளர்த்து, வாழ்க்கைத் துணை நலத்தில், பெண்ணின் திறத்தை வரையறைத்துக் கூறுகிறான். இந்தக் கூற்றில் முந்தைய கூற்றைவிட வளர்ச்சியுண்டு; பக்குவம் உண்டு.

அப்பால்,

பெண்ணிற்குக் 'கற்பை' வற்புறுத்துகிறான். அந்த வற்புறுத்தல் பலிக்கக் கற்பை ஆகாயத்தில்தூக்கி வைத்துப் போற்றுகிறான். கற்பின் பேராற்றலை நாம் பிரமிக்குமாறு பேசுகிறான்.

இங்கு வள்ளுவன் அன்றைய சமுதாய அமைப்பை-குடும்ப அமைப்பை-ஆண், பெண் வாழ்க்கை அமைப்பைக் கணக்கி

லெடுத்து, இல்லற உறுதிக்குப் பெண்ணின் உறுதி ஆதார பீடம் எனக் காண்கிறான். எனவே, நல்லறமான இல்லறத்தைப் பேண வேண்டுகிற வள்ளுவப் பேராசான், பெண்ணின் வாழ்வில், குறிப்பிட்டுக் 'கற்பை'ச் சுமத்துகிறான்.

ஆனால் ஆணை உறுதிப்படுத்த வேறு வழி சொல்கிறான், அல்லது வேறு மாதிரிச் சொல்கிறான். என்ன சொல்கிறான்? பிறன் மனைவியை விரும்பாதே என்று அறிவுரை வழங்குகிறான். வேறு எந்த அறவழியில் செல்லுவதை விடத்தானும் பிறன் மனைவியை விரும்பாதிருத்தலே இல்லறத்தை உறுதிப் படுத்தச் சிறந்த வழியாகும் என்கிறான். ஆடவனைக் கொண்ட மனைவியோடு உறுதியாக வாழச் செய்யும்முயற்சி, அக்காலத்தில் முன்னேற்றமான-முயற்சி என்பதில் ஐயமில்லை.

'கற்பு' பெண்ணின் பல சிறந்த குணங்களில் ஒரு குணமாகக் கருதப்படவில்லை வள்ளுவனால் மாறாக, அது தனிப் பெருங் குணமாக வற்புறுத்தப்படுகிறது. ஆனால் ஒரு ஆண் மகன், மற்றொருவன் மனைவியை விரும்பக் கூடாது, என்பது ஆண் மகனின் தனிப் பெரும் பண்பாக வள்ளுவம் கூறுகிறதென்று சொல்ல முடியவில்லை. மாறாக, அடக்கமுடைமை, நடுவு நிலைமை, ஒழுக்கமுடைமை போன்று 'பிறனில் விழையாமை'யையும் ஒரு சிறந்த பண்பாகவே கூறுகிறது. அன்றைய சூழ்நிலையைக் கணக்கில் எடுத்தே வள்ளுவப் பேராசான் இவ்வாறு ஆணையும் பெண்ணையும் அணுகுகிறான் என்பதில் விவாதம் வேண்டாம் என்று நான் கூறினால் நீயும் அதை ஒப்புக் கொள்வாய் என்றே நினைக்கிறேன். அதே பொழுதில் வள்ளுவத்தின் அணுகு முறை (Approach யை வாயாரப் புகழ்வாய் என்றும் கருதுகிறேன்.

அப்பால் வள்ளுவப் பேராசான், கடமை உணர்ச்சியுள்ள கணவன் மனைவியின் சொல்லுக்கு மசியக் கூடாது

என்கிறான். கற்புத் தெய்வம், கணவனைத் தொழுது எழுவாள் என்று ஓரிரு இடத்தில் கூறிய வள்ளுவப் பெருந்தகை மற்றோரிடத்தில் மனைவியிலிடத்தில் தாழ்ந்து நடப்பது கணவனுக்கு இழிதன்மையாகும் என்கிறான்.

சுருக்கத்தில், ஆண் பெண்ணை-அதாவது கணவன் மனைவியை வழி காட்டியாகவோ, தலைவியாகவோ கொள்ளக் கூடாது என்றும், மனைவியின் ஏவலைச் செய்து நடக்கும் ஆண்மை மானக் கேடானது என்றும் வள்ளுவப் பேராசான் ஐயத்திற்கு இடமின்றிக் கூறி, அன்று ஆணுக்கு ஏற்பட்டிருந்த ஏற்றத்தைப் படம் பிடித்துக் காட்டுகிறான்.

பொருளுக்காகப் பெண்கள் ஆணாசை கொள்ளக் கூடாது என்றும் பெண்களுக்கு இரு மணம் கூடாது என்றும் பெண்களில் உறுதியில்லாத பகுதியினரை சுத்தப் படுத்தி நேர் திசை திருப்ப வள்ளுவ மாமுனி முயல்கிறான். உறுதியில்லாது பொருளுக்காகப் பலரையும் விரும்பும் பெண்களை 'மாய மகளிர்' என்று வள்ளுவப் பெருந்தகை ஆண்களுக்கு அறிமுகம் செய்து வைத்துப் பெண் ஆண் உறவிலுள்ள ஒரு கோணலை நிமிர்த்த முனைகிறான். பொது மகளிரின் தோள் கீழ்மக்கள் ஆழ்ந்து கிடக்கும் நரகம் என்று சித்தரித்துக்காட்டி ஆணைத் திருத்தி அதன் மூலம் பெண்ணையும் சமுதாய வாழ்வையும் திருத்த நன் முயற்சி செய்கிறான் தெய்வப் புலவன்.

அன்பே! வள்ளுவனின் பெண்பற்றிய கண்ணோட்டத்தில் சமுதாய முன்னேற்றத்திற்கான கூறுகள் முன்னை விட அதிகம் இருக்கின்றன; ஏட்டுச் சுரைக்காயாக இல்லாமல் நடை முறைக்கு ஏற்ற முறை இருக்கிறது! சொல்லும் திறன் கைதேர்ந்த வகையில் காணக் கிடக்கிறது; அக்காலத்தின் எதிரொலியும் நன்றாகக் கேட்கிறது.

ஆயினும் வள்ளுவப் பேராசானின் வாய் மொழியில் கற்பு'பொது என்று காணப்படவில்லை. குடும்ப வாழ்விலும். சரி, வாழ்க்கையின் இதர துறைகளிலும் சரி, ஆணுக்கும் பெண்ணுக்கும் சம நீதி வழங்கப்பட வில்லை. வழி காட்டுவ திலோ தலைமை தாங்குவதிலோ, தொடர்ந்து செல் வதிலோ, பின்பற்றுவதிலோ ஆணைப்போல் பெண்ணுக்கும் சமஉரிமை உண்டு என்பது உறுதிப்படுத்தப்படவில்லை சுருங்கக் கூறின் பொதுமை நெறியும் சம உரிமைப் பண்பும் பெண்ணுரிமையைப் பொறுத்த மட்டில் திருக்குறளில் காணக்கிடக்கிறது என்று சொல்ல முடியவில்லை.

பெண்ணைப் பற்றிய கண்ணோட்டத்தில் திருக்குறள் பிறந்த காலத்தில் அது முன்னேற்றமான கருத்துடையது, தான் என்பதில் இரண்டு கருத்து இருக்க முடியாது. ஆனால் புது உலகத்திற்கு, பொது உலகத்திற்கு எத்தனையோ அரிய கருத்துக்களை இன்றும் அள்ளி வழங்கும் வள்ளுவப் பேராசானால் பெண் பற்றிய கண்ணோட்டத்தில் ஜன யுகத்தின் லட்சியத்தைத் திருப்திகரமாகச் செய்ய முடிய வில்லை.

ஏன்? வள்ளுவன் வாழ்ந்தது அந்தக் காலம். நாம் வாழ் வது இந்தக் காலம்.

## கடிதம் 20

அன்பு மிக்க......

நான் இதுவரை தீட்டிய கடிதங்கள் பத்தொன்பது அவற்றில் பதினைந்து கடிதங்களில், பழந்தமிழ் இலக்கியங் களில் பெண் பற்றிய கண்ணோட்டம் எப்படி ஊடுருவிச் செல்கிறது என்பதைத் தீட்டிக் காட்ட முயன்றுள்ளேன்.

தொல்காப்பியத்திலிருந்து எடுத்துக் காட்டுகள் அளித்தேன். அன்றையத் தமிழ்ச் சமுதாயத்தின் பெண்-ஆண் நிர்ணயிப்பைப் பற்றிய மரபுக் கருத்துக்களைச் சுட்டிக் காட்டினேன். உரையாசிரியர்கள் விளக்கங்களையும் உனது கவனத்திற்குக் கொண்டு வந்தேன்.

தொல்காப்பியம் ஒப்பற்ற இலக்கண நூல்தான்; மெய். வேறு எந்த இலக்கண நூலிலும் வேறு எந்த மொழியின் இலக்கண நூலிலும் காண முடியாதபடி தொல்காப்பியம் வாழ்க்கைக்கு இலக்கணம் கூறும் பொருளதிகாரத்தை உடைய சிறப்புடைய நிகரற்ற நூல்தான்; மெய். இலக்கண மாமேதை என்றும், 'தெய்வப் புலவர்' என்றும், தொல்காப்பியர் தமிழ்ப் பெருமக்களால் ஏற்றிப் போற்றுவதற்கு உரியர் தான்; மெய். ஆயினும், தொல்காப்பியச் சூத்திரங்கள் ஆணை வேறு கண் கொண்டும் பெண்ணை வேறு கண் கொண்டும் தான் பார்க்கின்றன. அன்றைய சமுதாய மரபு ஆண் உயர்வு பெண் தாழ்வு என்பதுதான். உறவுகளில் சில சிறந்த கூறுகளைச் சொல்வதால் அடிப்படையில் ஆடவரைப் பெருமைப்படுத்தியும், பெண்டிரைச் சிறுமைப் படுத்தியும் பேசுவதை மறைத்துவிட முடியாது. இதற்காகப் பெண்ணுலகமோ, பெண்ணுரிமை விரும்பிகளோ தொல்காப்பியரைக் குறை கூற மாட்டார்கள். அந்தக் காலத்தின் மரபு அது என்று கொள்வார்கள்.

நீயும் அவ்வாறு கொள்வாய் என்று கருதுகிறேன். அவ்வாறு கொள்ள வேண்டுமென்றுதான் உனக்கு எனது கடிதங்களில் திரும்பத் திரும்ப எழுதியிருக்கிறேன்.

''இலக்கியம் கண்டதற்குத்தானே இலக்கணம்?'' எனவே தொல்காப்பியத்தின் பெண்கள் பற்றிய கண்ணோட்டந்தான் சங்க கால இலக்கியங்களின் கண்ணோட்டமாகவும் இருக்க முடியும். இதில் விவாதத்தை எழுப்புவதற்கோ விளக்கத்தை கோருவதற்கோ தேவையில்லை.

புறநானூறு, அகநானூறு, ஐங்குறுநூறு குறுந்தொகை, ஐந்திணை ஐம்பது, பெரும்பாணாற்றுப்படை, திருக்குறள், பத்துப் பாட்டு, எட்டுத்தொகை, முதலிய பதினெண்கீழ்க் கணக்கு நூல்களிலிருந்தெல்லாம் பல வாழ்க்கைச் சித்திரங்களை எனது கடிதங்களில் வரைந்திருக்கிறேன். அவற்றில் நிழலாடி நிற்கும் மனித உணர்ச்சிகளின் சிறந்த பகுதிகளை அவ்வப் போது தொட்டுத் தொட்டுக் காட்டியிருக்கிறேன். நிலப் பிரபுத்துவச் சமுதாயத்தின் அடிப்படைக் கொள் கையான ஆண் உயர்வு-பெண் தாழ்வு என்ற கண்ணோட் டம் மேற்படி இலக்கியச் சித்திரங்களில் காணப்படுவதைக் காட்டியிருக்கிறேன்.

அவனே புலவன்
அவனே அறிஞன்
அவனே தமிழை
அறிந்தோன்

என்று கொடுமுடியில் தூக்கி வைத்துக் கொண்டாடப் படுகிற வள்ளுவப் பேராசான், சங்க கால இலக்கியங்களில் பரக்கக் கிடக்கும் சிறந்த கருத்துக்களின் தனிப்பெரும் கருவூலமான திருக்குறளை அருளிய வள்ளுவப் பெருந்தகை காட்டியுள்ள பெண்ணைப் பற்றிய கண்ணோட்டத்தையும், அதை எப்படிப் பார்க்க வேண்டும் என்பதையும் ஏழு கடிதங்களில் உனக்கு விளக்கிக் காட்டியிழுக்கிறேன். குறிப்பாக வாழ்க்கைத் துணை நலம், பிறனில் விழையாமை, பெண் வழிச் சேறல் வரைவின் மகளிர் ஆகிய அதிகாரங்களில் வரும் கருத்தோட்டத்தை விளக்கி, குறளாசிரியனின் பெண் பற்றிய கண்ணோட்டத்தை உனக்கு எடுத்துக் காட்டியுள்ளேன்.

திருக்குறள் பொதுமறைதான்; மெய். வள்ளுவப் பேரா சானின் 'நல்லாறு' பொது நெறிதான்; மெய். வையத்துள் வாழ்வாங்கு வாழ வழி காட்டிய வள்ளல்தான் வள்ளுவப் பெருந்தகை; மெய். ஆயினும், பெண்ணையும் ஆணையும்

சம நோக்கோடு அவன் பார்க்கவில்லை என்பதைத் திருக்குறள் காட்டுகிறது.

அன்று அன்றுதான்; இன்று இன்றுதான். வள்ளுவன் காலத்திற்கும் நம் காலத்திற்கும் இடைவெளி இரண்டாயிரம் ஆண்டுகள். பற்பல கருத்துக்களில், உலகுக்கெல்லாம் காலம் கடந்து பேசும் இணையற்ற வள்ளுவம் ஆண்-பெண்ணைப் பற்றிய அடிப்படைக் கண்ணோட்டத்தில் அந்தக் காலக் கருத்தையே எதிரொலிக்கிறது.

இந்தக் கருத்துக்காக வள்ளுவனை நீயும் நானும் மறந்தும் குறை கூறப் போக மாட்டோம். அன்றைய சமுதாயத்தின் கருத்து அது என்றே நான் கொள்கிறேன். அன்பே! அவ்வாறே நீயும் கொள்வாய் என்பதில் சந்தேக மில்லை.



Code No. A 508

**இந்நூல் :**

திரு. ப. ஜீவானந்தம் அவர்களால் எழுதப் பெற்ற **"புதுமைப் பெண்"** எனும் இந்நூல் பெண்ணுரிமையை வலியுறுத்தும் சிறந்த திறனாய்வுப் படைப்பாகும். தொல்காப்பியத்திலும், சங்க இலக்கியத்திலும், திருக்குறளிலும் கற்பு ஆடவர்க்கு வற்புறுத்தப்பட வில்லையே; ஏன்? பல பெண்களோடு ஒரு ஆண் வாழ்ந்ததைக் கண்டிக்கப்படவில்லையே; ஏன்? 'வரைவின் மகளிர்' எனும் அதிகாரத்தைப் படைத்த வள்ளுவப் பெருந்தகை ஆடவர்களைப் 'பொது மகன்' எனக் குறிப்பிடவில்லையே; ஏன்? 'மாய மகளிர்', 'இருமனப் பெண்டிர்', 'பொருள் பெண்டிர்', என வருணித்து பெண்களைப் 'பொது மகள்' எனச் சுட்டிய வள்ளுவப் பேராசான் ஆண்களையும் சுட்டிக் காட்டியிருக்க வேண்டாமா? இத்தகு வினாக்களைப் போட்டு பெண்ணைப் பற்றிய சமுதாயக் கண்ணோட்டம் ஈராயிரம் ஆண்டுகளாக எப்படி இருந்தது; இருந்து வருகிறது? என்பதையும் இனி 'புதுமைப் பெண்' எப்படி இருக்க வேண்டும் என்பதையும் அமரர் ஜீவா இந்நூலில் அழகுற விளக்கியுள்ளார்.

**டாக்டர் மு. வ.** அவர்களின் முன்னுரையுடன் வெளிவரும் சிறந்த நூல்.



மேலட்டை அச்சிட்டோர் :
**பாவை பிரிண்டர்ஸ் (பி) லிமிடெட், சென்னை-600 014.**